# செந்தமிழ்ச் செல்வி

## உள்ளுறை



சிலம்பு-௫௨ வள்ளுவர் ஆண்டு ௨௦௦௯, சித்திரை, May, 78

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---

# THE CILAPPATIKARAM

In English by Prof. V. R. Ramachandra Dikshitar

Released by

**Dr. Malcolm S. Adiseshiah,**

*Vice - Chancellor, University of Madras.*

The Cilappatikaram, which relates the tragic story of Kovalan and his wife Kannaki, is the best among the five Tamil Major Epics.

Such an epic has not yet gained a world-wide reputation for lack of editions in other languages of the world. This translation attempted by V. R. R. Dikshitar was originally published by Oxford, London. Though it had a good reception, reprints were not out in succession. To meet the desire of the present demand, this edition is being released with great efforts. It is hoped that the lovers of Tamil would heartily welcome and support our venture.

Demy Octavo - 460 pp Rs. 50/-

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௨ | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௦௯, சித்திரை<br>மே 1978 | பரல் ௯ |
|---|---|---|

## தமிழில் பலதுறை அறிவியல் நூல்களை ஆக்கும் முறை

தமிழில் விளங்கும் பழைமையான இலக்கண இலக்கியங்கள் பண்டைத் தமிழ் மக்களின் வாழ்க்கைச் சிறப்புக்களையும், புலவர் பெருமக்களின் கூர்த்த அறிவின் மாண்பையும் தெரிவிப்பதோடு ஆராய்ச்சியாளர்கள் வியக்கத்தக்க அறிவியல் கருத்துக்களையும் தாங்கியுள்ளன. இவற்றை முறைப்பட ஆய்வு செய்து உயர்திரு. பி. எல். சாமி, பி. எசி. அவர்கள் சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம், விலங்கின விளக்கம், புள்ளின விளக்கம், ஆடையும் அணிகளும், மீன்கள், மணிகள் முதலிய நூல்களை வரைந்து மேற்கூறியதனை மெய்ப்பித்துள்ளார். பழந்தமிழ் நூல்களைப்போல் அறிவியல் கருத்துக்களைக்கொண்ட பழைமையான நூல்கள் வேறு எம்மொழியினும் இல்லை என்பது அறிஞர்கள் ஆய்ந்து கண்ட முடிபு. இது தமிழ் மொழியின் தனிச் சிறப்புக்களுள் ஒன்று.

அறிவியல் ஆராய்ச்சிகள் முன்னை நிலைகளைவிட எத்தனையோ மடங்கு விரிவும் ஆழமும் உடையவாக நாளுக்கு நாள் பெருகி வளர்ந்து வருகின்றன. திங்கள் மண்டிலம், செவ்வாய் மண்டிலங்களிலும் மாந்தன் உலா வருகின்றான்.

பல்வேறு அறிவியல் துறைகளிலும் புதுமைகளையும் செய்முறைகளையும் பிறவற்றையும் பல்லாயிரக் கணக்கான கலைச்

சொற்களைக் கொண்டு விளக்கி ஏராளமான நூல்கள் வெளி வந்துள்ளன. மேலும் மேலும் வெளிவந்த வண்ணமிருக் கின்றன. அவற்றையெல்லாம் தமிழில் கொண்டுவந்தா லொழியத் தமிழ்மக்கள் முன்னேற முடியாது.

பலதுறை அறிவியல் நூல்களையும் தமிழாக்கம் செய்ய முனையும்போது பற்பல சிக்கல்கள் தலைபெடுக்கின்றன. தமிழில் கலைச்சொற்கள் போதுமான அளவுக்கு ஆக்கப்படவில்லை. இதற்கு அரசோ பல்கலைக் கழகங்களோ போதுமான அளவுக்கு அக்கறையோ முயற்சியோ எடுத்துக்கொள்ளவில்லை என்பது தெளிவு. இந் நிலையே நீடித்துக்கொண்டிருந்தால் தமிழினம் புதிய இருண்ட காலத்தில் சிக்கும் என்பதில் ஐயமில்லை.

அயல் நாடுகள் பலவற்றிற்குச் சென்றுவந்தவரும், மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தருமான உயர்திரு. டாக்டர் வி. சி. குழந்தைசாமி அவர்களைக் கண்டு அளவளாவியபோது அவர்கள் இதுபற்றிச் சில கருத்துக்களைத் தெரிவித்தார்கள். உலகில் மற்ற மற்ற மொழியினரும் தத்தம் மொழிகளில் கலைச் சொற்களை உருவாக்கிக்கொண்டு அறிவியல் நூல்களை எழுதுவ தில்லை. கலைச்சொற்கள் எந்த மொழியினவானாலும் அவற்றை அப்படியே எடுத்துக்கொண்டு அவற்றைத் தத்தம் மொழிகளில் செம்மையாக எழுதிக் கொள்ளுகின்றார்கள். ஆகையினால்தான் அறிவியலின் விரைந்த வளர்ச்சிக்கு அவர்களால் ஈடுகொடுக்க முடிகின்றது.

இன்று அறிவியலுக்கு நிலைக்களம்போல் விளங்கும் ஆங்கில மொழியில் விளங்கும் கலைச்சொற்களெல்லாம் அம் மொழிக்கே உரியனவல்ல. உலகெங்கும் உள்ள பற்பல மொழி களிலும் விளங்கும் கலைச்சொற்களைத் தன்னகத்தே கொண்டு தான் அம் மொழி அறிவியலை வளர்த்து வருகின்றது.

ஆழ்ந்து எண்ணிப்பார்ப்போமானால் பல்துறை அறிவியல் அறிவையும் தமிழில் கொடுப்பதற்கு நாமும் பிற மொழியினரைப் போல அறிவியல் கலைச்சொற்களை அப்படியே எடுத்துக்கொண்டு தமிழியல்புகட்கேற்ப அமைத்து அறிவியல் நூல்களை ஆக்கிக்கொள்வதே தக்க வழியாகும். இல்லையாயின் உடனடியாகத் தமிழில் பல்துறைக் கலைப் பாடநூல்களும்

உருவாக மாட்டா. தமிழ் பயிற்று மொழியாகவும் வாய்ப்பில்லை. நம்மவர்கள் முன்னேறவும் முடியாது.

சென்னைப் பல்கலைக் கழகத்தில் மொழிப்பாடமல்லாத பிற கலைப் பாடங்களைப் பயில்பவர்கள் நூற்றுக்கு நூறு ஆங்கிலத்தி லேயே பயின்று வந்தனர். அத் திட்டத்தை மாற்றி நூற்றுக்குப் பத்துப்பேர் தமிழிலும் மற்றவர்கள் ஆங்கிலத்திலும் பயில் வதற்கு வாய்ப்பளிக்கப் பெற்றது. இப்போது நூற்றுக்கு ஐம்பதுபேர் ஆங்கிலத்திலும் ஐம்பதுபேர் தமிழிலும் படித்தல் வேண்டுமென்று திட்டம் கொண்டுவரப் படுகின்றது. அத் திட்டத்தைச் சிலர் எதிர்ப்பது வியப்பாக இருக்கிறது. பிறநாடு களில் அவ்வந்நாட்டு மொழிகளிலேயே எல்லாக் கலைப் பாடங் களையும் மக்கள் பயிலுகின்றனர். அறிவியல் நூல்களில் பொதுவாக வழங்கப்படும் அறிவியற் சொற்களை அப்படியே பயன்படுத்துகின்றனர். அதனால் அந் நாட்டு மக்கள் அறி வியலில் மிகவும் முன்னேறிவருகின்றனர்.

கலைச்சொற்களை மட்டும் எடுத்துக்கொண்டு தனித்தமிழில் நூல்கள் ஆக்கவேண்டுமே யல்லாது, வழக்கத்திலுள்ள பொது வான தமிழ்ச் சொற்களையும் கைவிட்டுப் பிறமொழிச் சொற் களைக் கூட்டியும், கொச்சைச் சொற்களைப் புகுத்தியும், இலக்கணப் பிழையுறவும் எழுதுதல் கூடாது. அது பெரிதும் கண்டிக்கத் தக்கதேயாகும்.

மேற்கூறிய முறையில் நூல்கள் உருவாகுமானால் காலப் போக்கில் அறிஞர் பெருமக்களால் தமிழில் அறிவியல் கலைச் சொற்கள் கண்டுபிடிக்கப்பட்டு அவை பொருத்தமானவையாக ஏற்கப்பட்டு வழக்கிற்கு வருமேல் நன்றே.

இதுபற்றி அறிஞர் பெருமக்கள் தமிழன்பர்கள் ஆகி யோரின் கருத்தை வரவேற்கிறோம்.

"பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ்மொழியிற் பெயர்த்தல் வேண்டும்"  —பாரதியார்

வ. சு.

# தமிழின் தலைமையை நாட்டும் தனிச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

9. அந்தி

உம்முதல்=கூடுதல். முன்வருதல் (தோன்றுதல்), முன் செல்லுதல் (செல்லுதல்), நெருங்குதல், கூடுதல், பொருந்துதல், வளைதல், துளைத்தல், துருவுதல் ஆகிய எண்பெருங் கருத்துக்களிலும், உகரவடி மூலவேர்ச்சொல் சொன்முதன் மெய்களாகிய க ச த ந ப ம என்னும் ஆறெடுங் கூடி, அறுவழி வேர்ச் சொற்களைப் பிறப்பிக்கின்ற தென்னும் உண்மை, முன்னரே பலவிடத்துங் கூறப்பட்டுள்ளது. அதன்படி, கூடுதற் பொருள் கொண்ட உம் என்னும் மூலவேர்ச் சொல்லினின்று, கும் சும் தும் நும் பும் மும் என்னும் அறுவழிவேர்ச்சொற்கள் பிறக்கும்.

1. கும். கும்முதல் கூடுதல், திரன்தல். முந்தின 'செல்வி'யிதழ் பார்க்க.

2. சும். சும்மை=தொகுதி. "சுடரின் சும்மை விசும்புற" (கம்பரா. இலங்கை காண். 33). சும்—சொம்=சொத்து.

3. தும். தும்—திம்—திம்மை=பருமை, பருமன். திம்மலி (திமிலி)=பருத்தவள். திம்மன்=பருத்த ஆண் குரங்கு. திமி=பெருமீன் (திவா.). திமிறுதல்=நீண்டு பருத்து வளர்தல். திமிலம்=பெருமீன் (பிங்.).

4. நும். —(இறந்துபட்டது).

5. பும். பும் — பொம் — பொம்மல் = 1. கூட்டம். "பொலிந்தன வுடுவின் பொம்மல்" (கந்தபு. காசிபன் புல. 28). 2. பருமன். "பொம்மல் வனமுலை" (சீவக. 2717). 3. மிகுதி. "புகுந்தவவ் விருளின் பொம்மல்" (இரகு. இலவாண. 55). 4. பொலிவு. "பொன்னனைய பொம்மனிறம்" (கம்பரா. உருக்கா. 68). பொம்முதல்=மிகுதல். "அதிர்குரல் பொம்ம" (பாரத. பதினான். 112).

பொம்மெனல்=அடர்ச்சிக் குறிப்பு. "பொம்மெனிருள் வாய்" (திருக்கோ. 395).

6. மும். மும் — மம் — மம்மல் = மயங்கல்—மசங்கல் (அந்தி நேரம்) என்று கொள்ளவும் இடமுண்டு. மம்மல்—

மம்மர் = மயக்கம். "மம்மர்கொண் மாந்தர்க் கணங்காகும்" (நாலடி. 14). மயங்குதல் என்னுஞ் சொல்லின் முதற் பொருள் கூடுதல் (கலத்தல்) என்பதே.

உம் என்னும் சொல் கூடுதல் என்னும் வினைப் பொருளில் வழக்கிறந்தது. அப் பொருளுண்மையாலேயே அது கூட்டிணைப்புச் சொல்லாகக் (copulative conjunction) கொள்ளப் பட்டது. இணைப்பிடைச் சொல்லாக வரும் உம்மைச் சொல்லை எண்ணும்மை யென்பது இலக்கண மரபு.

"எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கமென்
றப்பா லெட்டே உம்மைச் சொல்லே." (தொல். இடை. 7)

"எதிர்மறை சிறப்பையம் எச்சமுற் றளவை
தெரிநிலை யாக்கமோ டும்மை யெட்டே." (நன். 425)

உம்மை யிடைச்சொல், பெயர்ச் சொற்களையும் உரிச்சொற்களையும் வினையெச்சங்களையும் இணைக்கும்.

எ - டு: அறமும் பொருளும் இன்பமும் வீடும்—பெயர்.

"மழவுங் குழவும் இளமைப் பொருள"—உரி.

சொல்லியும் எழுதியும் வருகிறான்—வி. எ.

உம்—அம் = நீர். "அம்தாழ் சடையார்" (வெங்கைக் கோ. 35) நீர் தன்னொடும் பிறிதொடும் கலக்குந் தன்மையது.

"செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே." (குறுந். 118)

அம்—அம்பு = நீர். ஒ. நோ: கும்—கும்பு.

அம்பு—வ. அம்பு.

அம்பு—அப்பு = நீர் (பிங்.). ஒ. நோ: கும்பு—குப்பு.

அப்பு—வ. அப்.

அம்—ஆம் = நீர்.

"ஆமிழி யணிமலை" (கலித். 48)

அம், ஆம் என்னும் இருவடிவும் வடமொழியி லின்மையை நோக்குக.

அம்பு—அம்பல் = 1. கூடுதல், குவிதல், முகிழ்த்தல். 2. பூ அலர்தற்குச் சிறிது முன்னுள்ள நிலை (பேரரும்பு) (இறை. 22,

உரை). 3. சிலரே யறிந்து புறங் கூறும் மொழி. "அம்பலும் அலருங் களவு வெளிப்படுத்தலின்'' (தொல். கள. 48).

அம்பல்—ஆம்பல்=இரவில் மலர்ந்து பகலிற் குவிவதாகச் சொல்லப்படும் அல்லி. அல் (இரவு)—அல்லி.

ஒ. நோ: கும்—குமுது—குமுதம்.

ம., தெ. ஆம்பல், க. ஆபல்.

அம்பு—அம்பலம்=1. பலர் கூடுமிடம். "ஆனைத் தீக் கெடுத் தம்பல மடைந்ததும்'' (மணி. பதி 67). 2 ஊர்ச்சபை. 3. கற்றோர் கழகம். "அரைச்சொல் கொண்டு அம்பல மேற லாமா?" (பழ.). 3. தில்லைப் பொன்னம்பலம். "சிறைவான் புனற்றில்லைச் சிற்றம் பலத்தும்'' (திருக்கோ. 11). 4. நாடகங் காண்போ ரிருக்கை. "அம்பலமு மரங்கமும்'' (சீவக. 2112). 5. ஊர்த்தலைவன். 6. சிற்றூர் அலுவல் வகை.

ம. அம்பலம், க. அம்பல, தெ. அம்பில, வ. அம்பர.

சிற்றம்பலம், பேரம்பலம் என்பன தில்லையிரம்பலங்களைக் குறிக்கும் உறவியலிணைச் சொற்கள் (relative terms).

சிற்றம்பலம் — வ. சிதம்பர. சிறு+அம்பலம்=சிற்றம் பலம், பேரம்பலம் என்பதற்கு எதிர்.

வடமொழியாளர் சித்+அம்பர என்று பிரித்து, ஞானசபை என்று பொருள் கூறுவர்.

அம்பலக்கல், அம்பலக் கூத்தன், அம்பலகாரன், அம்பலச் சாவடி, அம்பலத்தாடி, அம்பலத்தி (தில்லைமரம்), அம்பலப் படுத் துதல், அம்பலமேறுதல், அம்பலவரி, அம்பலவாணன் முதலிய தூய தமிழ் வழக்குண்மையையும், பேரம்பர என்னும் வழக்கின் மையையும், அம்பர என்னும் சொல்லிற்கு வடமொழியில் அம்பலம் என்னும் பொருளின்மையையும், நோக்குக.

அம்பலம், தில்லையம்பலம், திருச்சிற்றம்பலம், பொன்னம் பலம், வெள்ளியம்பலம், மணியம்பலம் என வருமிடமெல்லாம் லகரம் ரகரமாகாமையும் காண்க.

அம்—அமல். அமல்தல்=1. நெருங்குதல். "வேயம லகலறை'' (கலித். 45). 2. கூடுதல், திரள்தல்.

அமல்=நிறைவு. (ஞாறு. 34).

அமல்—அமலை=1. செறிவு. "அடுசினத் தமலையை'' (ஞாறு. 43). 2. பட்ட வேந்தனைச் சூழ்ந்து நின்று மறவர்

திரண்டு ஆடும் ஆட்டம். "பட்ட வேந்தனை அட்ட வேந்தன் வாளோர் ஆடும் அமலையும்" (தொல். புறத். 17). 3. சோற்றுத் திரளை. "வெண்ணெறிந் தியற்றிய மாக்க ணமலை" (மலைபடு. 441). 4. மிகுதி. (திவா.)

அமல்—அமர். அமர்தல்=1. நெருங்குதல். "அமரப் புல்லும்" (திருக்கோ. 372). 2. பொருந்துதல். "தன்னம ரொள்வாள்" (பு. வெ. 4 : 5). 3. படிதல். 4. அமைதல். வேலையில் அமர்ந்தான். 5. அமர்ந்திருத்தல். (கந்தபு. கடவுள். 12). 6. அமைதியாதல். காற்றமர்ந்தது, அமரிக்கை. 7. இளைப்பாறுதல். 8. ஒத்தல். 'அமர' ஓர் உவமவுருபு. (தொல். உவம. 11, உரை). 9. விரும்புதல். "அகனமர்ந் தீதலினன்றே" (குறள். 92). 10. தகுதல், ஏற்றதாதல். குலத்திற் கமர்ந்த தொழில். அமர்—அமர்கை—அமரிக்கை.

அமர்தல்=விரும்புதல், அன்பு கூர்தல், நேசித்தல். "அமர்தல் மேவல்" (தொல். உரி. 82). "ஆத்திசூடி யமர்ந்த தேவனை" (ஆத்தி. கடவுள்.). "அண்ணல் இரலை அமர்பிணை தழீஇ" (அகநா. 23). அமர்=விருப்பம்.

த. அம்—அமல்—அமர். அம்முதல்=பொருந்துதல்.

L. *amo*, *amare* to love, *amor*, love, *amator*, a lover, a friend, *amatrix*, sweetheart, *amicus*, friendly, *amice*, in a friendly manner.

இவ் விலத்தீன் சொற்களினின்று, amateur, amative, amatory, amiable, amicable, amoret, amorist, amoroso, amorous, amour, paramour முதலிய ஆங்கிலச் சொற்கள் திரிந்துள்ளன.

அமர்த்தல்=1. பொருந்திப் பொருதல். ஒ. நோ: பொருதல்=பொருந்துதல், போர்செய்தல். 2. மாறுபடுதல். "பேதைக் கமர்த்தன கண்" (குறள். 1084).

அமர்=1. போர். (சூடா.). 2. போர்க்களம். "அஞ்சவரு தானை யமரென்னும் நீள்வயலுள்" (பு. வெ. 8 : 5). 3. கடுமை. (W.). 4. வலிமை.

அமர்—சமர்=போர்.

அமரகம்=போர்க்களம். "அமரகத் தாற்றறுக்குங் கல்லா மா" (குறள். 814).

அமர்—அமரி=போர்த் தெய்வமாகிய கொற்றவை யென்னுங் காளி.

அமரி—சமரி=போர்த் தெய்வமாகிய காளி. "அமரி குமரி கவுரி சமரி" (சிலப். வேட். 67).

அமர்—அமரம்=1. போர். 2. ஆயிரங் காலாட் படைத் தலைமை. (W). 3. பண்டைப் படை மறவர்க்கு விடப்பட்ட ஊழிய மானிய நிலம். (I. M. P. Ct. 344) தெ. அமரமு.

அமரம்—சமரம்—வ. ஸமர.

வடமொழியிற் சமர் என்னுஞ் சொல்லின்மையை நோக்குக.

சமர்—சமர்த்து=போர்த் திறமை, திறமை. "சமர்த் தாற்று மாற்ருல்" (அரிச். பு. இந்திர. 46).

சமர்த்து—வ. ஸமர்த்த.

சமர்த்து—வ. ஸாமர்த்ய.

அம்—அமை. அமைதல்=1. நெருங்குதல். "வழை யமை சாரல்" (மலைபடு. 181). 2. பொருந்துதல். "பாங்கமை பதலை" (கந்தபு. திருப்பர. 9). 3. தங்குதல். "மறந்தவ ணமையா ராயினும்" (அகநா. 37). 4. தகுதியாதல். 5. உடன் படுதல். "கெழுதகைமை செய்தாங் கமையாக் கடை" (குறள். 803). 6 ஏற்புடைய தாதல். "பொருள் வேறுபட்டு வழீஇ யமையுமாறு" (தொல். பொ. 196 உரை). 7. தீர்மானமாதல். அந்த வீடு எனக்கமைந்தது. 8 அடங்குதல். "அமையா வென்றி" (கல்லா. முருக. 15.) 9. நிறைதல். "உறுப்பமைந்து" (குறள் 761). 10. போதியதாதல். "கற்பனவு மினியமையும்" (திருவாச. 39: 3). 11. பொந்திகை (திருப்தி) யாதல். "அமைய வுண்மின்" (W.). 12. கூடியதாதல். "காரியம்... அமையு மாயினும்" (சேதுபு. அவை. 2). 13. முடிவடைதல். "அமைந்ததினி நின்றெழில்" (கலித். 82).

அமை — அமைதி = 1. பொருந்துகை. 2. சமையம். "அன்னதோ ரமைதி தன்னில்" (கந்தபு. மூன்ரு. 210). 3. தன்மை. "ஆற்றின தமைதி" (சீவக. 1176). 4. செய்கை. "அமைதி கூறுவாம்" (கந்தபு. தெய்வ. 185). 5. அடக்கம். 6. தாழ்மை. "தொழுதகை யமைதியின்" (பரிபா. 4: 71). 7. அமரிக்கை. 8. சமந்தம் (சாந்தம்). 9. நிறைவு. "நக ரமைதி செப்புவாம்" (சீவக. 78). 10. பொந்திகை.

அமை—அமைவு. அமை—அமைப்பு—அமைப்பகம்.

அமை — அமையம் = பொருந்திய வேளை. "ஆனதோ ரமையந் தன்னில்" (கந்தபு. திருக்கல். 72). ஒ. நோ: நேர்—நேரம்.

அமையம்—சமையம்=தகுந்த வேளை, வேளை.

அமை—சமை. சமைதல்=1. அமைதல். 2. நிரம்புதல். "மலர்ந்து சமைந்த தில்லைகாண்" (திருவிருத். 68, வ்யா. 357). 3. முடிதல். 4. அரிசி காய் கறி முதலிய உணவுப் பொருள்கள் வெந்து உண்ணத் தகுதியாதல். 5. வேதல். 6. புழுங்குதல். இந்தக் கூட்டத்திற் சமைந்து விடுகிறது. 7. அழிதல். "ஐவர் தலைவருஞ் சமைந்தார்" (கம்பரா. பஞ்சசே. 67). 8. பெண் பிள்ளை பூப்படைந்து நுகர்ச்சிக்குத் தகுதி யாதல். "சமைந் தால் தெரியும் சக்கிலியப் பெண்ணும் சாமைக் கதிரும்" (பழ.). 9. மக்கள் இறைவனை வழிபட்டும் அறநெறியில் ஒழுகியும் அவன் திருவருளைப்பெற அல்லது திருவடிகளை யடையத் தகுதி யாதல். 10. ஏதேனும் ஒரு நிலைமைக்கு அல்லது கருமத்திற்கு அணியமாதல்.

ம. சமை.

சமைத்தல்=1. உணவுப் பொருளை வேவித்தல். 2. ஒன் றைச் செய்து முடித்தல். 3. அழித்தல். "மாதரைத் தங்கழ லாற் சிலர் சமைத்தார்" (கம்பரா. கிங்கர. 42).

ம. சமெ, க. சமை, தெ. சமயு.

சமை—சமையல்=உணவவித்தல்.

சமை—சமையம்—சமயம்=ஆதன் (ஆன்மா) இறைவன் திருவடிகளை யடையச் சமையும் வகை பற்றிய மதம்.

சமயம்—வ. ஸமய.

சமையம் என்பது வேளையையும், சமயம் என்பது மதத்தை யும், குறிக்கும் என வேறுபாடறிக.

அமை=1. அமைவு. 2. கூட்டம். 3. கெட்டி மூங்கில். "அமையொடு வேய்கலாம் வெற்ப" (பழமொ. 357).

அமை—அவை=1. மாந்தர் கூட்டம். (பிங்.) 2. அறிஞர் கூட்டம். அவையறிதல் (குறள்). 3. அவை மண்டபம். "தமனியத் தவைக்கண்" (கந்தபு. நகரழி. 6). 4. நாடக வரங்கு. கூத்தாட்டவை. (குறள். 332).

ஒ. நோ: அம்மை—அவ்வை. செம்மை—செவ்வை. அவை—சவை=அறிஞர் கூட்டம். "சவைநடுவே நீட்டோலை வாசியா நின்றான்" (மூதுரை. 13).

சவை—சபை—வ. ஸபா (Sabhā). சமர், சமை, சமையம் என்னுஞ் சொற்கள் போன்றே, சவை யென்னுஞ் சொல்லும் சகர மெய்யொடு கூடிய அகரமுதற் சொல்லாகும்.

வடமொழியாளர் ஸபா என்னுஞ் சொல்லை ஸ+பா (bhā) என்று பிரித்து, ஒளியொடு (பிரகாசத்தொடு) கூடியது என்று பொருட் கரணியங் காட்டுவர்.

காலஞ்சென்ற சு. ரு. சட்டர்சி அதை மறுத்து, Sib என்னும் திரூத்தானிய அல்லது செருமானியச் சொல்லினின்று ஸபா என்னும் சொல் திரிந்ததாகக் கூறினர். ஆயின், Sib என்பது உடன்பிறந்தாருள் ஒருவரைக் குறிக்குஞ் சொல்லாதலால், அது பொருந்தாது. ஆகவே, அவை என்பதை மூலச் சொல்லாகக் கொள்வதே பொருத்தமாம்.

அமைதல்=நெருங்குதல், கூடுதல். அமை=கூட்டம் (முதனிலைத் தொழிலாகு பெயர்). அமை—அவை—சவை—சபை.

உம் என்னுஞ்சொல் உந்து எனத் திரியுமென்று தொல்காப்பியம் கூறுகின்றது.

"உம்உந் தாகும் இடனுமா ருண்டே" (தொல். இடை. 44)

புறநானூற்றில் 24, 137, 339, 343, 352, 367, 384, 386, 395—6 என்ற எண்கொண்ட பாட்டுக்களில், செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம் செய்யுந்து என்னும் வாய்பாட்டுச் சொல்லாகத் திரிந்துள்ளது.

தொல்காப்பியம் உம் என்னுஞ் சொல்லைப் பெயரெச்சவீறென்று விதந்து குறியாது பொதுப்படக் கூறியிருப்பதால், உம் என்னும் இணைப்பிடைச் சொல்லும் உந்தெனத் திரியுமென்று கொள்ள இடமுண்டு.

உம் என்னுஞ்சொல் அம் என்று திரிந்தது போன்றே, உந்து என்னுஞ் சொல்லும் அந்து என்று திரிதல் வேண்டும்.

உம் என்னும் கூட்டிணைப்புச் சொல்லை யொத்த and என்னும் ஆங்கிலச் சொல், அந்து என்னுஞ் சொல்லை ஒத்திருப்பது கவனிக்கத் தக்கது.

"AND, Copulative Conjunction. (E.) Common from he earliest times. AS. *and*, also written *ond*; by-form, *nd*. O. Fries. *ande*, *and*, *an*; *end*, *en*; Du. *en*; Feel. *nda*, O. H. G. *anti*, *enti*, *inti*, *unti*; mod. G. *und*." என்று

கீற்று (Skeat) தம் ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் வரைந்திருத்தல் காண்க. உந்து என்னும் வடிவும் செருமானியத்தில் வழங்குதலை நோக்குக.

அம் என்பதன் திரிபான அமல், அமர், அமை என்னும் ஏனைச் சொற்கள் போன்றே, அந்து என்னும் சொல்லும் கூடுதற் பொருள் கொள்ளும்.

அந்துதல் = கூடுதல், கலத்தல், மயங்குதல். இப் பொருளில் இச் சொல் வழக்கற்றது. இப் பொருளில் வழங்கிய இலக்கியமும் இறந்துபட்டது.

அந்து—அந்தி = பகலும் இரவும் கலக்கும் (மயங்கும்) வேளை.

பகலும் இரவும் கலத்தல் காலையும் மாலையும் நிகழ்வதால், முதற்காலத்தில் அந்தி யென்னுஞ் சொல் காலை மாலை யிரண்டற்கும் பொதுவாகவே வழங்கிற்று. "காலையந்தியும் மாலையந்தியும்" என்னும் புறநானூற்றடியையும் (34 : 8). "காலையாகிய அந்திப் பொழுதும் மாலையாகிய அந்திப் பொழுதும்" என்னும் அதன் உரையையும், நோக்குக. அந்திக்காலை, அந்திமாலை என்றும் வழக்கிருந்தது. "அந்திமாலைச் சிறப்புச் செய்காதை" (சிலப். 4).

பின்னர், இம் மயக்கத்தை நீக்க, காலையந்தியை வெள்ளந்தியென்றும், மாலையந்தியைச் செவ்வந்தியென்றும் அடைகொடுத்து வழங்கினர்.

வேலைக்காரப்பிள்ளை வெள்ளந்தி நேரத்திலேயே எழுந்து வேலை தொடங்கவேண்டும் என்று, இன்றும் பெருமனைக் கிழத்தியர் கூறுதல் காண்க.

செவ்வந்தி நேரத்திற் பூக்கும் பூ செவ்வந்தியென்றே பெயர் பெற்றது. அப் பெயர் கன்னடத்திற் சேவந்தியென்றும், தெலுங்கிற் சேமந்தியென்றும், வடமொழியிற் சேவதீயென்றும், கொச்சை வழக்கிற் சாமந்தியென்றும் திரியும். கொச்சை வழக்குச் சொல்லை ஒரு புலவர் சா+மந்தி யென்று பிரித்துச் செத்த குரங்கு என்று பொருள்கொண்டு, "செத்த குரங்கைத் தலைமேற் சுமந்து திரிந்தனளே" என்று பாட்டும் பாடிவிட்டார்.

அமர், அமை, அமையம் என்னும் சொற்கள் போன்றே, அந்து என்னுஞ் சொல்லும் சகரம் பெற்றுச் சந்து என்ருயிற்று.

சந்து = 1. பொருத்து; மூட்டு. (பிங்.). சந்துசந்தாகப் பிய்த்துவிட்டான். 2. இருதொடைச் சந்தான இடுப்பு.

3. பலவழி கூடுமிடம். "சந்துநீவி" (மலைபடு. 393). 4. மாறுபட்ட இருவரை ஒன்று சேர்ப்பு. "உயிரனையாய் சந்துபடவுரைத்தரு ளென்றான்" (பாரத. கிருட்டிணன் தூ. 6). 5. தக்க (பொருந்திய) சமையம்.

ம. க., து. சந்து.

சந்துக்கட்டு=நெருக்கடி நிலைமை. ம., க., தெ. சந்துக்கட்டு.

சந்துக்காறை=ஒருவகைக் கைவளை.

சந்து செய்தல்=பிணங்கிய இருவரைச் சேர்த்துவைத்தல். சந்து சொல்லுதல்=பிணங்கியவரை இணக்கும் தூது சொல்லுதல். 'நடுநின்று இருவருக்குஞ் சந்து சொல்ல" (சிலப். 8:101, உரை). சந்து போதல்—பிணங்கியவரை இணக்குந் தூது போதல். சந்து போனவன் = உறுப்புக் கட்டில்லாதவன், மூடவன்.

சந்துவாதம்=இடுப்பில் வரும் ஊதைநோய்.

சந்துவாய்=மூட்டுவாய்,

அந்து என்பது சந்து என்றானபின், அந்தியென்பது சந்தியென்றாகிக் காலையந்தியைச் சிறப்பாகக் குறித்தது. அதனால், அந்தியென்னும் பொதுப்பெயர் மாலையந்திக்கே சிறப்புப் பெயராயிற்று.

அந்தியும் சந்தியும் அவனுக்கு இதே வேலை என்பதில், சந்தியென்பது காலையைக் குறித்தல் காண்க.

அந்திக்கடை, அந்திக்காப்பு, அந்திக்காவலன், அந்திக்கோன், அந்திச்செக்கர், அந்திப்புன்தீங்கு (தோஷம்), அந்திமந்தாரம், அந்திமந்தாரை, அந்திமல்லிகை, அந்திவண்ணன், அந்திவானம் என்னும் சொற்களில், அந்தியென்பது மாலையைக் குறித்தல் வெளிப்படை.

"அந்திமழை அழுதாலும் விடாது"

"அந்தியீசல் அடைமழைக் கறிகுறி"

என்னும் பழமொழிகளிலும், அந்தியென்பது மாலையையே குறித்தது.

கூடுதல் அல்லது கலத்தல் என்னும் அடிப்படைக் கருத்தில், அந்தி சந்தியென்னுஞ் சொற்கள் பல்வேறு பொருள்களைக் குறிக்கும்.

அந்தித்தல்=1. சந்தித்தல். "யமபடையென வந்திக்குங் கட்கடையாலே" (திருப்பு. 85). 2. கிட்டுதல். 'வேதமந்தித்து மறியான்" (திருவிளை. நகர. 106). 3. பணமுடிப்பாக முடித்து வைத்தல். "அந்தித்திருக்கும் பொருளில்லை' (திருவாலவா. 30 : 14).

சந்தித்தல் = 1. எதிர்தல். "சந்தித்திடற் கெளிதோ விந்தவாழ்வு" (திருக்கருவை. கலித். 75). 2. கண்டு கொள்ளுதல். "மயில்வாகனனைச் சந்திக்கிலேன்" (கந்தரலங். 60). 3. சேர்த்தல். "சந்தித்த கோவணத்தர்" (தேவா. 16 : 9).

சந்தி=1. கூடுகை. 2. பல தெருக் கூடுமிடம். "சதுக்கமுஞ் சந்தியும்" (திருமுரு. 225). 3. இணைப்பு. 4. பல பொருத்து அல்லது கணுவுள்ள மூங்கில். (பிங்.). 5. எழுத்துப் புணர்ச்சி. 6. நட்பாக்குகை (குறள். 633, உரை). 7. தறுவாய். நல்ல சந்தியில் வந்தான். 8. ஒரு பெரும்பண். (பிங்.). 9. நாடகச்சந்தி. (சிலப். 3 : 13, உரை). 10. வரிக்கூத்து வகை. (சிலப். 3 : 13, உரை).

சந்திக்கரை=சாலையும் ஆறும் கூடுமிடம்.

சந்திக் கருப்பன்=தெருச் சந்திகளில் வைத்து வணங்கும் சிறு தெய்வம்.

சந்திக் கிழுத்தல்=தெருச்சந்திக்கு வரச் செய்து குற்றங் குறைகளை வெளிப்படுத்தல்.

சந்திக் கூத்து=தெருச்சந்தியில் ஆடும் ஆட்டம்.

சந்திக்கோணம் = தெருறுப்புக்களுள் ஒன்று. "சந்திக் கோணமு மந்திரவாணியும்" (பெருங். உஞ்சைக். 58 : 51).

சந்திசிரித்தல்=தெருச்சந்தியில் மக்கள் பழித்தல்.

சந்திப்பாடு=தெருச்சந்தியிலுள்ள பேய்களால் ஏற்படும் கோளாறு.

சந்திப்பு=1. எதிர்கை. 2. ஆறு, தெரு, பாதை முதலியன கூடுமிடம். 3. பெரியோரைச் சென்று காண்கை. 4. பெரியோர்க்குக் கொடுக்குங் காணிக்கை.

சந்திமறித்தல்=கொள்ளைநோய்க் காலத்தில் தெருச்சந்தியிற் கொடை கொடுத்துத் தீய தெய்வங்களின் சின நதணிக்கை.

சந்திமிதித்தல்=1. நாலாம் மாதத்தில் நல்ல வேளையில் குழந்தையைத் தெருச்சந்திக்குத் தூக்கிச் செல்லுதல். "நாலாகு

மதியிற் சந்திமிதிப்பது நடத்தி'' (திருவிளை. உக்கிர. 27). 2. அம்மை நோய் நீங்கியபின் தெருச் சந்தியில் முதன் முதலாக வந்து மிதித்தல்.

சந்தியில் நிற்றல்=களைகணின்றித் தெருச்சந்தியில் நிற்றல்.

சந்தியில் விடுதல்=போக்குப் புகலில்லாதவாறு செய்தல்.

சந்தியிற் கொண்டு வருதல்=குற்றங் குறைகளை வெளிப்படுத்திப் பலர் பழிதூற்றுமாறு செய்தல்.

முச்சந்தி=மூன்றுதெருக் கூடுமிடம். நாற்சந்தி=நான்கு தெருக் கூடுமிடம்.

சொற் புணர்ச்சியைக் குறிக்கச் சந்தி யென்னுஞ் சொல் பண்டை நூல்களில் ஆளப்படாவிடினும், அப் பொருளையுங் குறிக்கத் தகுதி வாய்ந்த தமிழ்ச் சொல்லே அஃதென்பதை அறிதல் வேண்டும். வடவர் அப் பொருளில் அச் சொல்லை ஆண்டுவிட்டதனால், அது வடசொல்லாகிவிடாது.

சந்து—சந்தை (ஒ. நோ : மந்து—மந்தை) =1. பலவூர் வணிகரும் விற்பனையாளரும் கூடுமிடம். "தந்தைதாய் தமர் தார மகவெனு மிவையெலாம் சந்தையிற் கூட்டம்'' (தாயு. தேசோ. 3). 2. கூட்டம். "தண்ணுறு நந்தனம் வண்டின் சந்தையே'' (பிரபுலிங். கொக்கி. 6). 3. இருபுருவமுங் கூடுமிடம். "சந்தையில் வைத்துச் சமாதி செய்'' (திருமந். 1201).

ம. சந்த, க. சந்தெ. து. சந்தெ.

இச் சொல் வடமொழியில் இல்லை.

சந்தைக்காரன், சந்தைக் கூட்டம், சந்தை கூட்டுதல், சந்தைச்சரக்கு, சந்தைமடம், சந்தைமுதல், சந்தைவிரைச்சல், சந்தையேற்றுதல், சந்தைவிலை, சந்தைவெளி என்பன தொன்றுதொட்டு வழங்கிவருஞ் சொற்கள்.

இந்த மடம் போனாற் சந்தை மடம்.

சந்தைக்கு வந்தவர்கள் என்றைக்குந் துணையா?

சந்தையில் அடிபட்டவனுக்குச் சான்றவன் யார்?

சந்தையில் விலைபோகாதது எந்த வூரிலும் விலை போகாது.

சரக்கு மலிந்தாற் சந்தைக்கு வரும்.

இவை பழமொழிகள்.

வடமொழியாளர் சந்தி யென்னுஞ் சொல்லை ஸம்+தி (sam+dhi) என்று பிரித்து, ஸம்+தா (sam+dhā) என்னுங் கூட்டுச் சொல்லினின்று திரிப்பர். ஸம்=உடன், கூட, together. தா (dhā)=இடு, வை, to put. ஸம்தா (samdhā), to put together, join என்பது அவர் காட்டும் மூலம்.

தமிழில், உம்—உந்து—அந்து—அந்தி, அந்து—சந்து—சந்தி, சந்து—சந்தை என்றிவ்வாறு ஒரே சொல்லினின்று சொற்கள் படிமுறையாய்த் திரிந்துள்ளன.

இவை தொன்றுதொட்டும் தொடக்கந்தொட்டும் வழங்கி வருவன. சந்தை யென்னுஞ் சொல் வடமொழியிலின்மையும், இவை தூய தென்சொல்லே யென்பதை வலியுறுத்தும்.

தமிழ் குமரி நாட்டில் தோன்றிய உலக முதன்மொழி யென்னும் அடிப்படை யுண்மையை உள்ளத் திருத்தின், மேற கூறியதை உணர்வதில் இடர்ப்பாடேது மிராது.

"கைத்தலந் தன்னிற் செம்பொன் வளையல் கலகலெனச்
சத்தமொ லித்திட நூபுரப் பாதச் சதங்கைகொஞ்சத்
தத்திமி யென்றே நடஞ்செய் சப்பீசர் சங்கிதிப்பெண்
செத்த குரங்கைத் தலைமேற் சுமந்து திரிந்தனளே."

என்பது, முன்பு ஈற்றடி மட்டும் வரைந்து விடப்பட்ட பாட்டாகும்.

"பேரெலாம் பொம்மன் திம்மன் பெண்களோ காயும் பேயும்"

"போமிராச் சூழ்சோலை பொருகொண்டைப் பொம்மிலகயில்"

என்னும் தனிப்பாட்டடிகளுங் கவனிக்கத் தக்கன.

(தொடரும்)

## அரசுக்கு வேண்டுகோள்

இக் கட்டுரையாசிரியர் மொழிப் பேரறிஞர் ஞா. தேவநேயப் பாவாணர் அவர்கள் தலைமையில் நடைபெறும் 'செந்தமிழ்ச் சொற் பிறப்பியல் அகரமுதலி' என்னும் தனிப்பெரும் பணிக்குத் தமிழக அரசு வேண்டும் பொருளுதவி செய்வதோடு, இந்திய அரசின் கல்வித் துறை, பல்கலைக்கழக மானியக்குழு, அனைத்துலகக் கல்வி அறிவியல் பண்பாட்டுக் கழகம் (UNESCO) ஆகியவற்றிலிருந்தும் பொருளுதவி பெற்றுப் பூனா தக்கணக் கல்லூரியில் நடைபெறும் சமஸ்கிருத வரலாற்று அகரமுதலித் திட்டம்போல் சிறப்புற நடைபெற ஆவன செய்யும்படி வேண்டுகின்றோம்.

வ. சு.

# பாவேந்தர் பாரதிதாசன் விழா

பாவேந்தர், புரட்சிக் கவிஞர் பாரதிதாசனார் அவர்களின் 87ஆவது பிறந்தநாள் விழா முறையே 29, 30—4—78 ஆம் நாள் களில் தமிழக அரசால் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது.

சென்னைக் கலைவாணர் அரங்கில் நடைபெற்ற இவ் விழாவில், புகழ்பெற்ற சிறந்த கவிஞர் ஒருவருக்கு ஆண்டுதோறும் பாரதி தாசன் நினைவுப் பரிசாகப் பதக்க மொன்றும், பத்தாயிரம் வெண் பொற்காசுகளும் வழங்கப்படும் என அறிவிக்கப்பட்டது. அவ்வகை யில் இவ் வாண்டுக்குரிய பரிசு கவிஞர் 'சுரதா' அவர்கட்குத் தமிழக முதல்வர் மாண்புமிகு எம். ஜி. இராமச்சந்திரன் அவர்களால் அளிக் கப்பட்டது.

இவ் விழாவில் சிறப்புச் சொற்பொழி வாற்றிய முதல்வர், பாரதி தாசனின் கவிதைகளை 'இந்தி' உள்ளிட்ட பிற மொழிகளில் மொழி பெயர்க்க அரசு திட்டமிட்டிருப்பதாகவும் அதன் மூலம் இந்தி மொழியாளர் தமிழ் மொழியின் சிறப்பை அறியச் செய்யவும் எல்லா முயற்சிகளையும் மேற்கொள்ளும் எனத் தெரிவித்தார்.

மேலும், இதுகாறும் வெளியிடப் பெறுமலிருக்கும் பாரதிதாச னின் கவிதைகளை அச்சிட்டு வெளியிட விரும்புவதாகவும், அரசு, பாரதிதாசனாரின் குடும்பத்தார் நலமுடன் வாழ வழிவகைகள் காணும் எனவும் குறிப்பிட்டார். அத்துடன், சென்னைப் பல்கலைக் கழகத்தில் பாரதிதாசனார் பெயரில் ஆண்டுதோறும் நினைவுச் சொற்பொழிவு நடைபெறுதற்கென ஓர் அறக்கட்டளை நிறுவப்படு மெனவும் தெரிவித்தார்.

முதல்நாள் விழாவினைத் தமிழக நிதி அமைச்சர் மாண்புமிகு கி. மனோகரன் அவர்கள் துவக்கி வைத்துப் பேசுகையில் பாரதிதாச னின் கவிதைகள் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட வேண்டிய இன்றியமையாமையினை விளக்கினார். கல்வி அமைச்சர் மாண்புமிகு அரங்கநாயகம் விழாவிற்குத் தலைமை தாங்கினார். கவிஞரின் ஏழு நூல்களை உள்ளாட்சித்துறை அமைச்சர் மாண்புமிகு கா. காளிமுத்து வெளியிட்டார்.

அரசவைக் கவிஞர் கண்ணதாசன் பாரதியாரும், பாரதிதாச னும் உண்மைகளை ஒளிவு மறைவின்றிப் பாடியவர்கள் என்றும் அவர் கட்கு ஈடு இணை இல்லை என்றும் கூறினார்.

செய்தித்துறைத் துணை இயக்குநர் அனைவரையும் வரவேற்றுப் பேசினார். மாண்புமிகு அமைச்சர் இராம வீரப்பன் பாரதிதாசனின் சிறப்புக்களை எடுத்துரைத்தார்.

இவ் விழாவினை யொட்டி 30—4—78 இல் முன்னாள் உயர்நீதி மன்ற நடுவர் உயர்திரு. எஸ். மகராசன் அவர்கள் கருத்தரங்கினைத் தொடங்கி வைத்தார். மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் வி. சி. குழந்தைசாமி தலைமை தாங்கினார். அன்று மாலை யில் கவிஞர் புலமைப் பித்தன் தலைமையில் கவியரங்கம் ஒன்றும் நடைபெற்றது. பின்னர் டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் தலைமையில் நிறைவுவிழாச் சிறப்புக் கூட்டம் நடைபெற்றது. மாண்பு மிகு அமைச்சர் வீரப்பன் வரவேற்புரை நிகழ்த்தினார். முதல்வர் எம். ஜி. இராமச்சந்திரன் சிறப்புச் சொற்பொழிவாற்றினார்.

# பாவேந்தர் பாரதிதாசன் விழா (29,30-4-1978)



நாவலர் நெடுஞ்செழியன் தலைமையுரை ஆற்றுதல்.



கவிஞர் 'சுரதா' அவர்கட்கு மாண்புமிகு முதல்வர்
எம். ஜி. இராமச்சந்திரன் பொன்னுடை போர்த்திச் சிறப்பித்தல்

# திருமயிலையில், நாகை பொன்னம்பலம் பிள்ளை திருமண மண்டபத் திறப்பு விழா (14-4-'78)



உயர்நீதி மன்ற நடுவர் மாண்பமை எஸ். நடராசன் அவர்கள்
திருமண மண்டபத்தைத் திறந்து வைத்தல்



மாண்பமை நடுவர் எஸ். நடராசன் பொறுப்புச் சொத்து அறங்காவல்
துறை அதிகாரி, உயர்திரு. டி. என். சிங்காரவேலு ஆகியோர்

## திருமணமண்டபத் துவக்க விழா

சென்னைப் பொறுப்புச் சொத்துக் காவற்குழுவின் ஆட்சி யின்கீழுள்ள திரு. பொன்னம்பலம் பிள்ளை பண்ணையைச் சார்ந்த, 158, இராமகிருட்டிணு மடத்துத் தெரு, மயிலை திருமண மண்டபத்தைத் தமிழ்ப் புத்தாண்டு நாளாகிய 14—4—78 அன்று காலை சென்னை உயர்நீதி மன்ற நடுவர் மாண்பமை எஸ். நடராசன் அவர்கள், வேத சாத்திர முறைப்படி வேள்வி செய்து திருமறை ஒதுதலுடனும் இன்னிசை முழக்கங்களுடனும் துவக்கி வைத்தார்கள்.

அவ் விழாவில் பெருமக்கள் பலர் கலந்துகொண்டனர். பொறுப்புச் சொத்துக் காவற்குழு அதிகாரி திரு. T. N. சிங்கார வேலு அவர்கள் தம்முடைய வரவேற்புரையில்,

“இந்தக் கட்டிடமும் மற்றுமுள்ள சொத்துக்களும் நாகை பொன்னம்பலம் பிள்ளை அவர்களால் 1868 ஆம் ஆண்டில் கல்வி வளர்ச்சிக்காகவும், உணவுக்கொடை வழங்குவதற்காக வும் விருப்ப ஆவணத்தின் மூலம் கொடையாகத் தரப்பட் டுள்ளன. இந்த ஆவணத்தில் சிதம்பரத்தில் ஒரு சமக்கிருதப் பள்ளி நிறுவவேண்டு மெனவும், வருவாயில் ஒரு பகுதியைப் பச்சையப்பன் கல்வி நிறுவனத்துக்கு வழங்க வேண்டுமெனவும் பணித்திருக்கிருர்கள். திரு. பிள்ளை அவர்கள் சைவசமயப் பற்றும் தமிழ்ப்பற்றும் மிக்குடையவர்கள். தில்லை நடராசப் பெருமானிடத்தில் மிக்க பத்தி உடையவர்களாதலால் ஆனித் திருமஞ்சனம், திருவாதிரை ஆகிய சிறப்பு நாள்களில் இறைவன் வீதியுலாவிற்காகச் சிறுதேர் (சப்பரம்) ஒன்று செய்து வழங்கி யுள்ளார்கள். அங்கு அறவிடுதி (சத்திரம்) ஒன்றும் நிறுவப் பட்டுள்ளது. எனினும் பின்னர்க் காலப்போக்கில் இந்த அறக் கட்டளைகள் சரிவர நடைபெறவில்லை என்ற காரணத்தால் சென்னை உயர்நீதி மன்றத்தில் வழக்குத் தொடரப்பட்டு (C. S. 363/1912) 22—2—1915 இல் மாண்பமை நடுவர் திரு. குமார சாமி சாத்திரி அவர்களால், சென்னைப் பொறுப்புச் சொத்துக் குழு மேற்படி பண்ணையின் சொத்தைக் கவனித்துக் கொள்ள வும் திரு. பிள்ளையவர்கள் விருப்ப ஆவணத்தில் எழுதிவைத் துள்ள அறங்களைச் செய்யவேண்டும் எனவும் தீர்ப்பு வழங்கப் பட்டது.

“இந்தக் கட்டிடம் மயிலாப்பூரில் மேலக்கரையில் கோயி லுக்கு எதிரே ஒரு முக்கியமான இடத்தில் அமைந்திருந்த

போதிலும் தக்க வருமானமில்லாமலும், கடந்த சில ஆண்டு களாகப் பழுதுபார்க்கப்படாமலும் இருந்து வந்தது. தற்போது நாற்பதாயிரம் ரூபாய் செலவில் புதுப்பிக்கப்பட்டு நடுத்தர வகுப்பினருக்குப் பயன்படும் வகையில், திருமண விழாக் களுக்கும் மற்றும் சிறப்பு நிகழ்ச்சிகட்கும் குறைந்த கட்டணத் தில் விடப்படும் வகையில் அமைக்கப்பட்டிருக்கிறது'' என்று கூறினார்கள். அடுத்து, நடுவர் மாண்பமை எஸ். நடராசன் அவர்கள் தமது வாழ்த்துரையில் திரு. பிள்ளை அவர்களின் அறக் கொடையினையும், பொறுப்புச் சொத்துக் காவற் குழு வினர் மேற்கொண்ட முயற்சிகளையும் பாராட்டிப் பேசினர்.

பின்னர், அறநிலையத்துறை துணைஆணையரும் நேர்முக உதவியாளருமான திரு. வி. எஸ். கோதண்டபாணி அவர்களும், மாவட்ட வருவாய்த்துறை அதிகாரியும், மாநகராட்சி வருவாய்த் துறை அதிகாரியுமான திரு. எம். கிருஷ்ணன் அவர்களும் வாழ்த்துரை வழங்கினர். பொறுப்புச் சொத்துக் காவல்துறை (Official Trustee) தலைமை எழுத்தர் திரு. எஸ். கே. பழனி சாமி அவர்கள் நன்றியுரை நவில, விழா இனிது முடிந்தது. விழாவிற்கு வந்திருந்த அனைவர்க்கும் சிற்றுண்டி வழங்கப் பட்டது.

குறிப்பு: இந்தத் திருமணமண்டபத்தைப் பயன்படுத்த விரும்பு வோர் கீழ்க்காணும் முகவரிக்கு எழுதித் தொடர்பு கொள்ளும்படி கேட்டுக்கொள்ளப் படுகின்றனர்.

பொறுப்பாளர், திருமண மண்டபம்
158, இராமகிருட்டிண மடம் சாலை,
மயிலாப்பூர், சென்னை-600004.

---

தமிழ் நாட்டு மன்னர்களும் சிற்றரசர்களும் சைவசித்தாந்த வளர்ச்சிக்கும் தமிழ் வளர்ச்சிக்கும் தமது பொருளைச் செலவு செய்தல் வேண்டும்.

—மறைமலையடிகள்
(மறைமலையடிகளார் அறிவுரைக் கோவை பக். 200)

## *மறைமலையடிகளார் நூலகம் வாழ்க!

[புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்]



எல்லா வரம்பெற்ற பார்ப்பனர்கள் எங்களிறை
பல்லா வரத்து மறைமலைநூல்—கல்லா
வரம்பெற்ற தில்லை மறைவாகக் கற்பார்
உரம்பெற்ற தில்லை உளத்து.

எவ்வெத் துறைநூல்கள் எங்கே வெளிவரினும்
அவ்வெத் துறைநூலை ஆய்ந்தாய்ந்து —செவ்வி
நலங்கொண்டு சேர்த்தநூல் நாலா யிரமும்
வலங்கொண்டு வந்ததமிழ்ச் சொத்து.

நுண்ணிய நூற்பலவும் கற்பதே நோன்பாக
எண்ணிய வாழ்நாள் எலாம் அளித்துப்—பண்ணிய
செந்தமிழ்நூல் ஒவ்வொன்றும் செப்பும் கடலறிவை
பைந்தமிழைக் காக்கும் படை.

அடிகளார் பேரால் அமைந்த நூலகத்தால்
விடியலாய் வையம் விழிக்கும்!—கொடிபறக்கும்!
வாபகையே என்றழைத்து வாகை மலர்சூடும்
நாமடைவோம் வெற்றி நடை!.

———

*மறைமலை அடிகளாரின் மாண்பினையும் அவர் பெயரால் கழகம் அமைத்துள்ள நூலகத்தின் சிறப்பினையும் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள் பாராட்டி வாழ்த்துரைக்கும் பாடல்கள். இவை 'பாரதிதாசன் புகழ் மலர்கள்' என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டவை.

நன்றி : "பாரதிதாசன் புகழ் மலர்கள்"

## மதுரைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர்
## டாக்டர் குழந்தைசாமி

மதுரைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தராகப் பதவி ஏற்றிருக்கும் டாக்டர் வி. சி. குழந்தைசாமி அவர்கள், திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த வங்கம் பாளையத்தில் 1930 இல் பிறந்தார். நுண்மாண் நுழைபுலம் பெற்ற இவர் இளமையிலிருந்தே கல்வியில் சிறந்து விளங்கியதோடு சிறப்பாகத் தொழில் நுணுக்கக் கல்வியில் மிகுந்த ஆர்வமுடையவராகி நீராற்றல் (Hydrolic) அறிவியற்றுறையில் தனித்திறம் பெற்று விளங்குகிறார். சென்னைப் பல்கலைக் கழகக் கலைஞர் மன்றம் (Acadamic Council) பல்கலைக் கழக ஆட்சிமன்றம் (Senate) ஆகியவற்றில் உறுப்பினராக இருக்கிறார். அமெரிக்காவிலுள்ள இல்லினாய்ஸ் பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்ற இவர், 1953 இல் கல்வித் துறையில் பணியாற்றத் துவங்கினார். 1964 இல் கிண்டி பொறியியல் கல்லூரியில் பேராசிரியரானார். 1971 இல் அதே கல்லூரியில் மேல் பட்டப் படிப்பின் முதல்வரானார். 1974 இல் தொழில் நுணுக்கக் கல்வி இயக்குநர் ஆனார். நீராற்றலில் இவர் கண்டுபிடித்த ஒரு கணக்குமுறை "குழந்தைசாமி மாடல்" என்றே வழங்கப்படுகின்றது.



இவை அனைத்துக்கும் மேலாக, இவர் தமிழில் மிகுந்த ஆர்வமுடையவராக விளங்குவது குறிப்பிடத்தக்கதாகும். தமிழில் உரையாற்றுவதிலும் கட்டுரைகள் கவிதைகள் எழுதுவதிலும் சிறந்த ஆற்றல் பெற்று விளங்குகிறார். அவ் வகையில் இவர் எழுதிய "குலோத்துங்கன் கவிதைகள்" என்னும் நூல் குறிப்பிடத்தக்கதாகும்.

இவர் கழகத்திடமும், கழக ஆட்சியாளர் அவர்களிடமும் மிகுந்த பற்றுடையவர். கழகம் நடத்திய விழாக்களில் கலந்து கொண்டு இவர் ஆற்றிய உரைகள் குறிப்பிடத்தக்கவை.

இவர் அண்மையில் பாரிசில் நடைபெற்ற அனைத்து நாட்டுக் கல்வி அறிவியல் பண்பாட்டுக் கழகம் (UNESCO) அனைத்து நாட்டு நீராற்றல் திட்டக்குழுவின் கூட்டத்தில் கலந்து கொண்டார். இவர் தம் தொழில் நுட்ப அறிவினைப் பாராட்டும் வகையில் இந்திய அரசு தங்கப் பதக்கமும், பண விருதும் அளித்துப் பெருமைப் படுத்தியுள்ளது.

———

# சப்பானிய நெடுங்கணக்கில் தமிழ் ஒலிநிரல்*

[திரு. லோகேஷ் சந்திரா, எம். பி. (மாநிலங்களவை) புதுதில்லி]

1936இல் நான் ஒன்பது அகவைச் சிறுவனாக இருந்தபோது, சப்பானிய 'கானா' நெடுங்கணக்கினைப் பயிலத் தொடங்கினேன். அப்போதுமுதல் அதன் உண்மையான மூலம் என்னுள் ஒரு கேள்விக் குறியாகவே விளங்கி வருகின்றது. அந் நெடுங்கணக்கு 50 அசையொலிகளையும், இவ்வெண் வரையறைக்கு மிகையாக un என்ற ஒலிப்பினையுடைய இறுதி n ஒலியையும் கொண்டுள்ளது. கோஜூன்ட்சு (Gojūondzu) எனக் குறிக்கப்பெறும் சப்பானிய நெடுங்கணக்கு கீழ்க்காணும் முறையில் அமையும்.

| | | | | |
|---|---|---|---|---|
| a | i | u | e | o |
| ka | ki | ku | ke | ko |
| sa | shi | su | se | so |
| ta | chi | tsu | te | to |
| na | ni | nu | ne | no |
| ha | hi | fu | he | ho |
| ma | mi | mu | me | mo |
| ya | yi | yu | ye | yo |
| ra | ri | ru | re | ro |
| wa | (w)i | (w)u | (w)e | (w)o |

இந்திய ஒலி நிரலிலிருந்து இந் நெடுங்கணக்குத் தோற்றம் பெற்றிருப்பது மிகத் தெளிவு. ஆயின், நாகரி நெடுங்கணக்கினோடு ஒத்து நோக்குகையில் இந் நிரலில் வேற்றுமைகளும் இடை வெளியும் தென்படும். இந் நிலைமை அறிஞர்கள் உண்மைக்குப் புறம்பான நெறியில் செல்லக் காரணமாயிற்று. சான்றாக அறிஞர் எஸ். யோஷிடேக் (S. Yoshitake)-ஐக் கூறலாம்: ''ஏழு ஆண்டுகளுக்கு முன்னர் திரு. இ. பாகேல் (Mr. E. Pagel) பின்வரும் வினாவிற்கு விடையளித்தார். 'Was wissen

---

* மொழியாக்கம்: தி. சு. சத்தியம், எம்.ஏ, மலையாளம், சமற்கிருதம், - மொழியியல் சான்றிதழ் (திருக்குறள் ஆராய்ச்சித்துறை, சென்னைப் பல்கலைக் கழகம்)

ஆற்றுப்படுத்தியவர்: டாக்டர். ந, சஞ்சீவி, தமிழ்ப் பேராசிரியர், சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை-5.

wir von den Lauten des altjapanischen?[1] கோஜூன்ட்சு எனக் குறிக்கப்படும் 50 அசையொலிகளைக் கொண்ட சப்பானிய ஒலி யட்டவணை, தேவநாகரி நெடுங்கணக்கினை ஒட்டி அமைக்கப் பட்டது என்பது உலகளவில் ஒப்புக்கொள்ளப்பட்ட ஒரு கருத் தாகும். இவ்விரு நெடுங்கணக்கு அமைப்புக்களும் ஒரு சில மாற்றங்களைத் தவிர ஒத்துச் செல்கின்றன. நாகரி ஒலி நிரலில் c(ts), j (dz) அடைமயும் வரிசைக்கு, இணையாக சப்பானிய ஒலி நிரலில், s-ஒலி பெறும் அசையொலிகள் அமைகின்றன. இவ் வட்டவணை அமைக்கப்பட்ட பொழுது, சப்பானிய s ஒலி ts என ஒலிக்கப்பட்டது என்று நிறுவுதற்குரிய உறுதியான சான்றாக இம் மாற்றம் அமைவதாகத் திரு. பாகேல் கருதவில்லை. ஏனெனில் அட்டவணையைக் குறைபாடின்றி முற்றுவிக்கும் நோக்கில் c ஒலி இடம் பெறும் வரிசையில் s ஒலி இடம் பெறும் படி அமைத்திருக்கலாம்.''[2]

புள்ளி விவர அடிப்படையில் சப்பானிய நெடுங்கணக்கு, நாகரி நெடுங்கணக்குடன் இருபெரும் நிலையில் ஒப்புமையுடைய தாய் விளங்குகின்றது.

(i) 12 உயிர்கள், 18 மெய்கள் ஆக 30 அடிப்படை ஒலிகளையுடைய தமிழ் நெடுங்கணக்கின்[3] எண்ணிக்கையில் மாறுபட்டு, சப்பானிய நெடுங்கணக்கும் நாகரி நெடுங்கணக்கும் தம்மிடையே சில வேற்றுமைகள் இருப்பினும் 50 ஒலிகள் என்ற எண்ணிக்கையில் ஒத்து விளங்குகின்றன.[4]

---

1. E. Pagel, Was wissen......, Asia Major 3(1926)·345.

2. S. Yoshitake, The Phonetic System of Ancient Japance, London 1934, p. 2.

3. G. U. Pope, A Handbook of the Ordinary Dialect of the Tamil Language, Oxford 1926, p. 6 (§ II. The alphabet).

4. The Nagari alphabet as written in Siddham in Japan is :

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| a ā | i ī | u ū | ṛ ṝ | ḷ ḹ | e ai | o au | am | aḥ | |
| ka | kha | ga | gha | ṅa | ca | cha | śa | śha | ña |
| ṭa | ṭha | ḍa | ḍha | ṇa | ta | tha | dha | na | |
| pa | pha | ba | bha | ma | ya | ra | la | va | |
| śa | ṣa | sa | ha | llam | | | | | |

(ii) நாகரி நெடுங்கணக்கில் வல்லின ஒலி வகைகளாய மிடற்றெலி (ka), அண்ண ஒலி (ca), நாமடி ஒலி (ṭa), பல்லொலி (ta), இதழொலி (pa) ஆகிய ஒவ்வொன்றும் ஐந்தைந்து எழுத்தொலிகளைப் பெற்றுள்ளன. சப்பானிய மொழியில் இவ்வொவ்வொரு வகையிலும் சில ஒலிகளே உள்ளமையால் இந்நிக் முறையை முழுவதுமாகப் பின்பற்றல் அரிதாகின்றது. ஆனால், புறநிலை வடிவமைப்பில் ஐந்து எனும் எண்ணிக்கை ஆட்சி சப்பானிய நெடுங்கணக்கு அமைப்பு முறையில்—a i u e o, ka ki ku ke ko போன்றன—படிந்துளது.

புறநிலை அமைப்பில் மிகப்பெரும் அளவில் நாகரியினை ஒத்து விளங்கும் வேட்கையால் அமைந்த ஐந்தொகைப் பிரிவு, ஷிங்கூன் (Shingon) பள்ளியின், வைரோகானு (Vairocana) (மையம்), ரத்னகேது (Ratnaketu) (கிழக்கு), சங்குசுமிதராஜா (Sankusumitarāja) (தெற்கு), அமிதாபா (Amitābha) (மேற்கு), திவ்யதுந்துபி—மெகானிர் கோஷா (Divyadundubhi—meghanirghoṣa) (வடக்கு) என்னும் ஐந்து ததாகதஸ் (Tathāgatas) ஸையும் அறிவிக்கின்றது. ஷிங்கூனை நிறுவிய கோபோ டெய்ஷி (Kōbō daishi) என்பவரால் சப்பானிய நெடுங்கணக்கு உருவாக்கப்பட்டதால், ஷிங்கூன் கொள்கைகளின் தாக்கத்தினை அந் நெடுங்கணக்கு ஏற்றுளது. மனித அறிவாற்றலைக் கடந்த மீஉயர் ஆற்றலை, காரணங் காணவியலாத ஒன்றை, முடிவிலா ஒன்றை உணர்ந்துகொள்ள இந் நெடுங்கணக்கு ஒரு கருவியாகச் செயலாற்றுகின்றது. ஹிஜோ ஹோயகு (Hizō hōyaku)வின் வேண்டுதலாகிய, கோபோ டெய்ஷி என்பவரால் இயற்றப்பட்ட 'மறைக் கருவூலத்தின் விலை மதிப்பில் திறவுகோல்' தர்ம மண்டலத்தைப்போல் நெடுங் கணக்கினிடம் அடைக்கலம் நாடுகின்றது.[5]

[நான் அடைக்கலம் பெறுகின்றேன்] மோன ஒருமையில், Ka [மலர்தல்], Ca [உள்ளடங்கல், Ṭa [மாட்சிமை], Ta [போன்மை], Pa [உண்மை], Ra [ஊர்தி] 'மோன ஒருமை' மஹாவைரோகானுவைக் குறிக்கின்றது. Ka—கார்யா—செயலினையும், Ca—சுயுத்தி—வீழ்ச்சியினையும், Ṭa—டங்கா—செருக்கினையும், Ta—ததாதா—போன்மையையும், Pa—பரமார்த்த சத்யா—மூல உண்மையையும், Ra—யானு—ஊர்தியினையும்—அனைவரையும் இவர்ந்தேகும் வரம்பிலாற்றல் ஊர்தியினையும் குறிக்கின்றன. (தொடரும்)

5. Yoshito S. Hakeda, Kukai: Major Works, New York 1972, p. 162 and n. 23.

# பேராசிரியர் சுந்தரம் பிள்ளை

[புலவர் பெ. முனியப்பன்]

(நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா)

(தரவு)

மெய்ப்பொருளைக் கணித்துரைக்கும் மேதகுபே ராசிரியர்
செய்பணியால் தமிழர்க்குச் செழும்பயனை உதவியவர்
திட்டமிட்டு மறைத்துவந்த தெளிதமிழின் திறன்களையும்
கட்டமையா வரலாற்றின் கழிமாற்றச் செயல்களையும்
உற்றவண்ணம் உரைத்தவர்,மீ உயர்தமிழ்க்கோர் இலக்கியத்தைப்
பற்றிலரும் உவந்திடவே படைத்தவர்நம் சுந்தரனார்.

(தாழிசை)

செந்தமிழின் இயற்கையினைச் சிறந்தஅதன் முதன்மையினை
வந்தவர்கள் சிதைத்ததையும், வளர்ந்திருந்த இலக்கியங்கள்
இந்நிலத்திற் குரியதுவாய் எதிரில்லா அறங்களினைத்
தந்ததையும் மருவில்லாத் தமிழ்வாழ்த்தாய் எடுத்துரைத்தார். (1)

கடலுள்ளே அமிழ்ந்திருக்கும் குமரிநிலக் கணிப்புடனே
இடமெங்கும் வளம்பெருக்கும் எழிற்பொன்னிப் புவியினின்றும்
தொடங்குகின்ற வரலாறே துவளாது நிலைபெற்றுச்
சுடர்வீசும் எனும்மெய்யைச் சூழ்ந்தாய்ந்தே எடுத்துரைத்தார். (2)

முன்பெல்லாஞ் செழிப்புற்று முத்தமிழாய்ச் சிறந்திருந்த
தென்மொழியின் நாடகங்கள் திரைகடலால் எரிநெருப்பால்
வன்பகையால் அழிந்தொழிந்த வறுமையினை அகற்றுதற்காய்
மன்பதைக்கோர் அணிமனோன் மணியத்தை எடுத்துரைத்தார். (3)

(தனிச்சொல்)

எனவே,

(சுரிதகம்)

வாய்மை ஓங்கவும் வளமெலாஞ் சிறக்கவும்
தூய்மை காக்குந் தொல்தமிழ் பேணி
வேண்டிய பணியை யாண்டுஞ் செய்ய
ஈண்டு நல்லதோர் எழுச்சியை வழங்குஞ்
சூட்டைத் தந்த சுந்தரனார்
காட்டிய வழியினில் விரைவது கடமையே.

———

# பண்பட்டீர் பட்டம் அளிப்பீர்

[பாவலன். வி. பகா. சுந்தரம்
தமிழ்நாடு இறையியல் கல்லூரி, மதுரை.]

பண் : கல்யாணி] [தாளம் : ரூபகம்

பல்லவி

அறிவர் பட்டம் அளிக்க வாரீரோ--தமிழ்
அன்பர் வ.சு.வின் பண்பின் பணிக்கே. (அறி)

துணைப்பல்லவி

செறிவுத் தமிழ்நூல் காப்பே அளித்தார்
செம்மையின் நெறியில் நன்மையே படைத்தார். (அறி)

சரணம்

குறளை—சிலம்பை ஆங்கிலம் ஏற்றி
திறமாய் உலகில் செந்தமிழ் சாற்றி
அறமே புரிந்தார் அன்பே நிறைந்தார்
மறவா நூல்களில் உறவாய் எழுந்தார். (அறி)

(2)

பழகப் பழகப் பண்பில் இனிப்பார்
கழகப் பணியே உயிராய்த் திளைப்பார்
அழகு நூலுக்குள் அழைத்தே படைப்பார்
தொழுகத் திருமுறைத் தூயுரை அளிப்பார். (அறி)

(3)

தேர்ந்தசொற் காவலர் இராம லிங்கரும்
தெய்வநல் மொழிநூல் தேவ நேயரும்
ஆய்ந்த தமிழெலாம் அறியப் போற்றினர்
அரும்தமிழ் வாழப் பெரும்வழி சாற்றினர். (அறி)

———

# பாட்டங்கால் வந்த பயன்*

[சித்தாந்த கலாநிதி ஔவை சு. துரைசாமிப் பிள்ளை]

செங்கைமா என்னும்போதே அதனை வடக்கிலும் கிழக்கிலும் வளைந்து மணந்து கிடந்தோடும் சேயாறு மனக்கண்ணில் காட்சி வழங்குகிறது. கலங்கிக் கலுழி பாய்ந்தோடு தற்குரிய அதன்கண் தெளிந்த நீரோடுகிறது. குருதி பாய்ந்தது போலப் பரந்து தோன்றும் செம்மணல், இரு மருங்கும் இளைஞர் சடுகுடு விளையாடி மகிழ்தற்கு இடந்தருகிறது. இதன் நடுவே, சிறு சிறு கற்களிடையே, சலசலவெனக் கலித்தோடும் நீர் வழியே செல்லின், செங்கைமாவின் கீழ்ப் பகுதியை அடைகின்றோம். ஆங்கேயுள்ள மணற்பரப்பில், சிறுமியர் மணல் வீடு கட்டிச் சிறு சோறட்டு விளையாட்டயர்கின்றனர். இவ்விடத்திற்கும் கீழைத் தெருவின் முடிவுக்கும் இடையே தென்னந்தோட்டம் நின்று தீவிய நிழல் செய்கின்றது. ஒரு புறத்தே, காய்கறி பயிராகும் பாட்டங்காலில் (தோட்டக்காலில்) உழவரும் பிறரும் தமக்குரிய வேலை செய்கின்றனர். வேலியிற் படர்ந்த பாகற் கொடி நகைப்பதுபோல அரும்பு மலர்ந்து அழகு திகழ்கின்றது. வேலியின் தென்கீழ் முடுக்கரில் நிற்கும் குறிஞ்சி மரம் தழைத்துப் பூவலர்ந்து பொலிகின்றது.

சிவந்த மேனியும் நீண்ட கரிய கூந்தலுமுடைய நங்கையொருத்தி வேறு சில பெண்களுடன் தென்னந்தோப்பின் கீழ்ப் பக்கத்தே மணல் பரந்த நிழலிடத்தே ஓடி வருகிறாள். அவளெதிரே வேறு சில சிறுமியர் வந்துகொண்டிருக்கின்றனர். அவர்களைக் கண்டதும், “மணலில் விளையாடலாம், வருவையோ?” என்கிறாள் தலைமை தோன்ற முற்போதரும் தடங்கண்ணி. “உன்னோடு விளையாட வந்தால், என் வேலை எல்லாம் அப்படியே கிடக்குமே? என் தாய் சினவுவளே” என்கிறாள் எதிரில் வரும் இடையர் மகள். “யான் என் வேலையெல்லாம் முடித்து விட்டேன். தன்னையர் கறந்து கொணர்ந்த பாலை வேற்றுக் கலங்களில் மாற்றி விட்டேன்; கன்றிருந்த தொழுவினைத் தூய்மை செய்துவிட்டுக் கன்றையும் மனையில் தூண்களில் பிணித்துப் புல்லிட்டேன்.” “ஈதேதடி நீலப்பட்டு?” என்று வினவுகிறாள் அருகில் நிற்கும் அரக்காம்பல்.

தடங்கண்ணி: இந் நீலப் பூவாடையை என் தாய் தந்தாள்.

இடையர் மகள்: சரி, எனக்கு இன்னும் வேலை முடியவில்லை; நான் போய் வருகிறேன்.

---

* இவ் வரிய கட்டுரை நாள்கட்டுப் பாட்டினால் செந்தமிழ்ச் செல்வி 1944 முதல் 2 ஆண்டுக்காலம் நிறுத்தி வைக்கப்பெற்றபோது வரப் பெறாது இப்போது ஒரு கோப்பிலிருந்து கிடைத்தது.

தடங் : வேலையைச் சுருக்காய் முடித்துக் கொண்டு வருகிருயா?

இடையர் மகள் : (சிறிது தொலைவு சென்று) தடங்கண்ணி! அதோ, அப்பாங்கர்ப்புதருக்குப் பக்கத்திலேயே இருங்கள். யானும் விரைவில் வந்துவிடுகின்றேன்.

தடங் : நல்லது, போய் வா. (மற்றவர்களைப் பார்த்து) வாருங்கள் அவள் சொன்னபடியே அப் புதருகிலேயே விளையாடுவோம்.

ஏனைமகளிர் : ஆமாம்; அது நல்ல இடந்தான். நீ அங்கே வீடு கட்டிக் கொண்டிரு; நாங்கள் அக்கரையிலுள்ள கோட்டை வெளியில் களாப்பழம் பறித்துக் கொணர்கின்றோம். வீடு கட்டி அதிலிருந்து உண்பதற்குச் சோறு வேண்டாவா?

தடங் : அது நல்லதுதான். (மகளிர் போகின்றனர். தடங் கண்ணி மணல் வீடு புனைகின்ருள்.)

உருவில்லாத காமன் உருக்கொண்டு வருதல் போல வரும் இவ் விளங்காளை யாவன்? இவன் தலையில் குருந்தம் பூவால் தொடுத்த கண்ணியிருந்து நறுமணமும், பேரழகும் செய்கின்றதே! இவனுடைய மார்பும் தோளும் காண்கின்ற நம் மனக் கண்ணைக் கவர்ந்து கொள்கின்றன. முகத்தில் தவழும் முறுவல் நம் உள்ளத்தைக் குளிர்ப்பிக்கின்றது. நெற்றியின் ஒளி அவன் அகத்தே தோய்ந்து கிடக்கும் அருணிலையைப் புலப்படுத்துகின்றது. அசைந்து வரும் அவனது நடையில் அறவொழுக்கத்தின் அமைதி விளங்குகிறது.

உரனும் பெருமையும் ஒருங்கு விரவிய அவனது உயர் நிலையை அவனது உடலின் ஒவ்வோருறுப்பும் புலப்படுத்துகின்றது. வருகிறவன் முகம் அப்போது அலரும் மலரென மலர்கின்றதே! ஏன்? அவன் தடங்கண்ணியைக் காண்கின்ருன். சிறு நாணம் முகத்தே படருகிறது; அதுவும் உடனே மாறுகிறது. முகம் நன்கு ஒளிர்கிறது. இன்பவுணர்ச்சி எழுகிறது என அது நமக்குத் தெளிய உணர்த்துகிறது. முன்னம் முகம்போல முன்னுரைப்பது வேறொன்றும் இல்லையன்றோ? இவன் யாவன்? இவனே இளங்கண்ணன். முருகனைப் போல முருகுதிகழத் தடங்கண்ணி முன் வருகின்ருன்.

இதுகாறும் அவன் வரவை யறியாதிருந்த தடங்கண்ணி, தன் மலர் முகத்தை அவன் பக்கத்தில் திருப்பி அவனைக் காண்கின்ருள். அவளது தடங்கண்ணிடத்தே களங்கமற்ற தூய வொளி யெழுகிறது. சட்டென அவள் முகம் கவிழ்கிறது. சிற்றில் புனைவதிலே அவள் கைகள் ஈடுபடுகின்றன. அது

நன்கு அமையாது கோடுகின்றது. அதனைச் சிதைத்து வேறு அமைக்கின்றாள். அதுவும் நன்கு அமையவில்லை. அது கண்டதும் இளங்கண்ணன், பொக்கென நகைத்து, "நல்லாய், இச் சிற்றில்லை யான் புனைந்து தரலாமோ? சிறிது ஒதுங்கு; யான் நன்கு அமைத்துத் தருகின்றேன். பின்பு நீ அதிலிருந்து இல் வாழ்க்கை செய்வாய்," என்கின்றான்.

இச் சொற்கள் தடங்கண்ணியின் செவியிற் புகுதலும், அவள் முகம் சிவந்தது. நாணத்தாலோ வெகுளியாலோ அறியோம். அவள் மலர் வாயிலிருந்து சில சொற்கள் வெளி வந்தன. அவற்றின் ஒசையில் வேண்டாக் குறிப்பே மேம் பட்டிருந்தது. அச் சொற்கள், "எல்லா! நீ பெற்றேம் யாம் என்று பிறர் செய்த இல்லிருப்பாய்; கற்றது இல மன்ற, காண்" என வந்தன. இவற்றால் நம் இளங்கண்ணன், "பிறர் அமைத்த இல்லின்கண் இருந்துகொண்டே, நாம் இதனைப் பெற்றேம் என மகிழ்வேம்; நமக்கென இல் அமைத்துக்கோடலை நாம் அறிந்திலேம் என இறுமாந்து பேசுகின்றாள்," எனக் கொண்டு அவ்விடம் விட்டுப் பெயர்ந்தேகினன்.

* * * *

பின்னொரு நாள் மாலைப் போதில் இளங்கண்ணன் யாற்று மணலில் சிறு மகளிர் பலர் ஒன்று கூடிப் பூக்கொய்து விளை யாட்டயர்தலைக் கண்டான். அவர்கள் தாம் பறித்த பூவை அழகுற மாலை தொடுத்து ஒருவருக்கொருவர் அணிந்து கொண் டனர். அவர் செய்கையைச் சேய்மைக் கண்ணே நின்று நோக்கியிருக்கையில், தடங்கண்ணி தொடுத்த பூங்கோதை நன்கு அமையாமையால் மகளிர் கைகொட்டி நகையாடக் கண்டான். அவட்குத் தன்னாலியன்ற துணைபுரிய வேண்டு மென்றொரு வேட்கை அவன் உள்ளத்தே எழுந்தது. அதன் வயப்பட்ட அவன் மெல்ல அம் மகளிர் இருந்த சூழலை அடைந் தான். தடங்கண்ணி, தன் கோதையை மறுவலும் நன்கு தொடுக்க முயல்வதைக் கண்டு, அன்பு கனியும் மொழிகளால், "முற்றிழாய்! தாது சூழ் கூந்தல் தகைபெறத் தைஇய கோதை புனைகோ நினக்கு?" என்றான். அது கூறி முடிக்குமுன் அவன் செவியகத்தே, "எல்லா, நீ ஏதிலார் தந்த பூக்கொள்வாய்; நனி மிகப் பேதையை மன்ற பெரிது" என்ற சொற்கள் புகுந்து அவன் நெஞ்சத்தைச் சுட்டன. அவன் முகம் விளர்த்தது. நாணத்தால் உடல் சுருங்கிற்று. பேசுதற்கு நாவெழவில்லை. அறிவு கலங்கி ஒன்றும் உரையாடாது அவர்களினின்றும் நீங்கிச் சென்றான். சிறிது தொலைவு சென்றதும் திரும்பி

நோக்கின அவன் நோக்கிற்கு எதிராகத் தடங்கண்ணியின் காதற்குறிப்புணர்த்தும் அன்பு நோக்கம் வந்தது. உள்ளம் குளிர்ப்பெய்த, உவகையூற்றெடுப்ப, ஊக்கம் கிளர்ந்து இளங் கண்ணன் ஏகினன்.

*　*　*　*

காலை ஒன்பதுமணி இருக்கும்; சேயாற்றிற்கு இடையர் மகளிர் கூட்டமாகச் செல்கின்றனர். மூவரும் நால்வரும் ஐவருமாகச் செல்கின்றனர். "ஏடி, கொடிமுல்லை! உங்கள் வீட்டில் இன்றைக்குச் ஏதோ சிறப்பு நடைபெறுகிறதாமே? மெய்தானா? என்று வினவுகின்றாள் கண்ணகி என்னும் காரிகை. "இது தெரியாதா? எங்கள் வீட்டிற்குச் சான்றோர் இன்று மணம்பேச வருகின்றார்களாம். விடியலில் மணமுரசு எழுந் ததே; நீ கேட்கவில்லையோ?" என்கிறாள் அக் கொடிமுல்லை. வேறொருத்தி, "யாருக்கு யாரை மணம் பேசப்போகின்றனர்?"

கொடிமுல்லை: தடங்கண்ணியை மேற்பாடி கோதை வேலனுக்கு மணம் பேசப் போகின்றார்கள்.

கண்ணகி: தடங்கண்ணி எங்கே? அவள் இன்னும் வர வில்லையே. அவள் முகத்தைப் பார்க்க வேண்டும்.

கொடிமுல்லை: அவள் முகத்தைப் பார்க்க வேண்டா. அவளுக்கு இந்த மணத்தில் விருப்பமே யில்லை. அவள் முகவாட்டம் என் தாய்க்கு மிக்க வருத்தத்தை யுண்டுபண்ணி யிருக் கிறது.

*　*　*　*

தடங்கண்ணியும் அவள் தோழி அரக்காம்பலும் தோட்டத் தில் ஒரு புறத்தே நிற்கின்றனர். வெண்முகிலிற் படிந்து ஒளி மழுங்கிய திங்கள் போலத் தடங்கண்ணியின் முகம் சாம்பி இருக் கிறது. கண்கள் நீர்த்துளிகள் தாங்கிக் கலுழ்கின்றன. ஏதோ சொல்ல நினைக்கின்றாள். நாணம் தகைக்கின்றது. நெஞ்சைத் தேற்றுகிறாள். பிறர் கேட்பரோ என அஞ்சும் அவள், சுற்று முற்றும் அடிக்கடி பார்க்கிறாள். "ஏடி ஆம்பல்," என்கின்றாள்.

அரக்: என்ன செய்தி? சொல்.

தடங்: ஒன்றுமில்லை; இதற்கொரு வழி சொல்வாயா?

அரக்: எதற்கு?

தடங்: இந்த மணப் பேச்சைத் தடுப்பதற்கு.

அரக்: திருமணத்தைச் சிதைப்பது தீது. அறமே யன்று. ஒ அது கூடவே கூடாது.

தடம்: (கையைப் பிசைந்து கொண்டு) ஐயகோ நான் சொல்வ தற்குள் நீ ஒரு முடிபு செய்து விடுகிருயே! நீயும் எனக்குத் தீங்கு செய்யத் துணிந்தனை போலும். (கண்களில் நீர் சொரியத் தேம்பியழுகிருள்.)

அரக்: (கண் கலங்கி) தடங்கண்ணி! அழாதே! சொல். என்ருல் இயன்றதை முட்டின்றி முடிக்கின்றேன்.

தடம்: (தனக்குள்) எவ்வாறு சொல்வேன். (சிறிது தாழ்த்து) இனி தாழ்ப்பதில் பயனில்லை. அறத்தொடு நிற்பதே தக்கது. (வெளிப்படையாக) நீ அவனைக் கண்டு......

அரக்: (மருண்டு நோக்கி) எவனை?

தடம்: (தழுத்த குரலில்) இளங்கண்ணனை.

அரக்: (வியப்புடன்) இளங்கண்ணனையா? அவனேடுதான் நீ முன்னொரு நாள் வெறுத்துப் பேசிவிட்டாயே!

தடம்: எப்போதும் கிடையாதே.

அரக்: நீயே நினைத்துப் பார். அன்று குறிஞ்சிமரத்து முடுக் கரில் விளையாடும்போது, அவன் வந்தானன்ருே!

தடம்: (நகைத்து) நீ அறியாது பேசுகிருய். நடந்தது கேள்.

அரக்: என்ன? சொல்.

தடம்:

“தீம்பால் கறந்த கலம்மாற்றிக் கன்றெல்லாம்
தாம்பால் பிணித்து மனைநிறீஇ, யாய்தந்த
பூங்கரை நீலம் புடைதாழ மெய்யசைஇப் பாங்கரும்
முல்லையும் தாய பாட்டங்கால் தோழி! நம்
புல்லினத்து ஆயர் மகளிரோடு எல்லாம்
ஒருங்கு விளையாட அவ்வழி வந்த
குருந்தம் பூங்கண்ணிப் பொதுவன்மற்(று) என்னை
முற்றிழை ஏஎர் மடநல்லாய்! நீ ஆடும்
சிற்றில் புனைகோ சிறிது” என்ருன்; “எல்லா! நீ
பெற்றேம்யாம் என்று பிறர்செய்த இல்இருப்பாய்;
கற்றது இலைமன்ற காண்” என்றேன்.

(வேருெரு நாள்)

..........................."முற்றிழாய்!
தாதுசூழ் கூந்தல் தகைபெறத் தைஇய
கோதை புனைகோ நினக்கு?" என்றான்; எல்லா! நீ
ஏதிலார் தந்தபூக் கொள்வாய்; நனிமிகப்
பேதையை மன்ற பெரிது," என்றேன்.

(இவ்வாறே மற்றொருநாள்)

..........................."மாதராய்!
ஐய பிதிர்ந்த சுணங்கணி மென்முலைமேல்
தொய்யில் எழுதுகோ மற்று?" என்றான்; "யாம்பிறர்
செய்புறம் நோக்கி இருத்துமோ? நீபெரிதும்
மையலை மாதோ, விடுக" என்றேன்.

அரக்: அங்ஙனமிருக்க, அவனிடம் ஏன் போக வேண்டும்?

நடங்:

..........................."தையலாய்!
சொல்லிய வாறெல்லாம் மாறுமாறு யான்பெயர்ப்ப
அல்லாந்தான் போலப் பெயர்ந்தான்."

அரக்: அதற்காக இப்போது நாமே போவதா?

நடங்: போனால் என்ன? குற்றம் ஒன்றுமில்லை.

அரக்: போய் என்ன சொல்வது?

நடங்:

..........................."அவனை, நீ,
ஆயர் மகளிர் இயல்பு உரைத்து, எந்தையும்
யாயும் அறிய உரைத்தியின், யான்உற்ற
நோயும் களைகுவை மன்..."

அரக்: (தலையசைத்து) அப்படியா? இருக்கட்டும். ஆயர் மகளிர் இயல்பு என்ன என்றால் என்ன சொல்வது?

நடங்: நீயும் ஆய்மகள் தானே, உனக்குத் தெரியாதா?

அரக்: எனக்கு இப்போது நினைவு இல்லை; நீயே சொல்.

நடங்:

"விரிநீர் உடுக்கை உலகம் பெறினும்
அருநெறி ஆயர் மகளிர்க்கு
இருமணம் கூடுதல் இல்இயல் பன்றே." (கலித்தொகை).

அரக்: நல்லது, நல்லது; நான் போய்வருகிறேன்.

நடங்: நோய் களைதல் வேண்டும்; நினைவில் இருக்கட்டும். வாழ்க.

---

# முருகன் தீம்புனல் அலைவாய்

[பேராசிரியர் கோ. வே. பெருமாள், எம்.ஏ., பி.டி.,]

**முன்னுரை:**

நாம் வாழும் இந்த இருபதாம் நூற்றாண்டின் பிற்பகுதியை, 'அறிவியல் ஊழி' என்று அறிந்து போற்றுகின்றோம். நமக்கு, மிக முந்திய காலங்களில் வாழ்ந்த நம்முன்னோர், இன்றுள்ளன போல, அழகிய எழுது கருவிகளோ அச்சுப் பொறிவாய்ப்புக்களோ பெற்றிருக்க வில்லை; ஆதலின், அவர்கள் உற்ற அவல நிலைகளை-அல்லல்களை நம்மால் எண்ணிப் பார்க்கவும் இயலாதுதான்! மக்கள் சைகை நிலை கடந்து - பேச்சு நிலை உற்று - எழுத்துநிலை பெற்றதற்கே, நூறாயிரக்கணக்கான ஆண்டுகளைக் கடந்திருக்க வேண்டும்! கற்காலம்—உலோக காலம் என்ற ஊழிகளை எல்லாம் கடந்து, 'பொற்கோல வாழ்வு' உற்றதற்கும் இவ்வாறுதான் ஊழிகள் பல கடந்திருக்க வேண்டும்!! மக்கள் முதன் முதலில் எழுதக் கற்ற மிகப் பழங் காலத்திலே, கற்பாறைகள், உலோகத் தகடுகள், மரப் பட்டைகள், பலகைகள், பதனிட்ட தோல்கள், இலைகள், ஓலைகள் முதலியனவற்றையே, எழுதுவதற்கு உரிய இதழ்களாகக் கொண்டிருந்தனர். ஏறத்தாழப் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, பழந்தமிழகத்திலே, ஓலைகளில் எழுத்தாணி கொண்டு 'ஏடு' எழுதிக் கற்றிருக்க வேண்டும் என்று கணித்துள்ளனர்! இதன் பின்னரே, பிற உலக நாடுகள், இப் பழக்கத்தைப் பின்பற்றியிருக்க வேண்டும் என்பர்!! அறுநூறு ஆண்டுகளுக்கு முன்னர்த்தான், தமிழ் நூல்களை அச்சிடும்வழக்கம் தோன்றியது! இந்திய மொழிகளிலே, முதன் முதலில் அச்சுப் புத்தகம் தோன்றியது, தமிழிலேயேதான் என்பர்.[1] ஆயினும், அச்சிடப் பெறாத பழைய ஏட்டுச் சுவடிகள், தமிழ்மொழியிலே, நூற்றுக்கணக்கிலே செல்லரித்தும் சிதைந்தும் இருந்தன! ஆதலின், இந்திய மொழிகளிலே, 'நூல்வளம்' மிகுந்திருந்த ஒப்பற்ற மொழியாக, 'தமிழ்' திகழ்ந்து வந்துள்ளது.

**நூல்வளம்:**

ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தோன்றிய 'சங்க கால நூல்கள்', இதற்கு ஏற்ற சான்றுகளாக

---

1. மயிலை சீனி. வேங்கடசாமி. (கி. பி. 1900)—கிறித்தவமும் தமிழும் (கி. பி. 1936) கழக வெளியீடு— சஎஅ; அச்சுப் புத்தக வரலாறு; பக்கம்-82. "...இந்திய மொழிகளில் முதன் முதல் அச்சுப் புத்தகம் உண்டானது, தமிழ் மொழியிலேதான்...முதல் அச்சுப் புத்தகம் கி. பி. 1577-இல் அச்சிடப் பெற்றுள்ளது".

இன்று இலங்குகின்றன; பன்னிரு திருமுறைகள், நாலாயிரம் (ஆழ்வார்) திருப்பாடல்கள், ஐம்பெருங்காப்பியங்கள், ஐஞ்சிறு காப்பியங்கள், பலவகை இலக்கண நூல்கள், பிற்காலப் பக்திப் பாடல்கள், சிற்றிலக்கியங்கள் முதலிய பைந்தமிழ் நூல் செல்வங்கள் எல்லாம் பனையோலை ஏடுகளிலேயே எழுதப் பெற்றிருந்தன. இவை தவிர, இன்று, அப் பழந்தமிழ் நூல் செல்வங்களில் பல, முழுமையாகக் கிடைக்கப் பெறவில்லை! அம் மிகுந்த நூல் செல்வத்திலே, கடல்கோள் முதலிய இயற்கை ஊறுபாடுகளால் கழிந்தன பல என்பர்; மக்களின் அறியாமையால்—மூடப் பழக்க வழக்கங்களால்—அயலவரின் நயவஞ்சகக் காழ்ப்பு உரைகளால்—கவலை இன்மையால்—கறையான் அரிப்பால்—பொறுப்பற்ற போக்கால்—ஆட்சி மாற்றங்களால் அழிந்து போன தமிழ் நூல்களுக்கு அளவில்லை என்பர்![2] இன்றுவரை கிடைக்கப் பெறாத சில பழந்தமிழ் நூல்களின் சில பாக்களை, 'புறத்திரட்டு' போன்ற தொகை நூல்களால், படிக்கும் பேறு பெற்றுள்ளோம்; அவற்றால், அப் பழந்தமிழ் நூல்களின் பெயர்களையேனும், தெரிந்து கொள்ளும் வாய்ப்புப் பெற்றுள்ளோம்.[3] இவ்வாறே, உரையாசிரியர்களின் மேற்கோள் செய்யுட்கள் சில, இன்றுவரை கிடைக்கப் பெறாத நூல்கள் சிலவற்றை அறிமுகம் செய்கின்றன. எனவே, இந்திய மொழிகளிலேயே ஏற்றம்மிக்க நூல்வளம் பெற்றிருந்த உயர்தனிச் செம்மொழி ஒன்று உண்டு என்றால், அது தமிழைத் தவிர வேறு இருக்க இயலாது என்பர்! இன்றுவரை கிடைக்கப் பெறாத பழைய நூல் பாடல் ஒன்றிற்கு எடுத்துக்காட்டாக, தொல்காப்பிய உரையாசிரியர்களிலே, உச்சிமேல் புலவர்கொள் நச்சினார்க்கினியர் உரைமேற்கோள் பாடல் ஒன்றை, இங்கே ஆராயலாம்.

---

2. திரு. தி. வை. சதாசிவ பண்டாரத்தார்—பாண்டியர் வரலாறு (கி. பி. 1940) பக்கம்-6. "கடல் கோளினால் எண்ணிறந்த தமிழ் நூல்கள் இறந்தன. இச் செய்தியை,

'ஏரணம் உருவம் யோகம் இசைகணக்(கு) இரதம் சாலம்,
தாரண மறமே சந்தம் தம்பநீர் நிலமு லோகம்,
மாரணம் பொருள்என்(று) இன்ன மானநூல் யாவும் வாரி
வாரணம் கொண்ட(து) அந்தோ! வழிவழிப் பெயரும் மாள'

என்னும் பழைய பாடல் உணர்த்துதல் காண்க" (வாரி, வாரணம்=கடல்).

3. பேராசிரியர் ச. வையாபுரிப் பிள்ளை, பி.ஏ., பி.எல்.,—பதிப்பு; புறத்திரட்டு (கி. பி. 1939) சென்னைப் பல்கலைக்கழக வெளியீடு; நான்முகம் III புறத்திரட்டினால் விளைந்த தமிழ்வளம்.

**நச்சினார்க்கினியர்:**

பண்டைய தமிழ்ப் பனுவல்களின் பாங்கு அறியச் செய்த பெருமை, உரையாசிரியர்களையே சாரும். காலங் கடந்த பழந் தமிழ் நூல்கள் பல, பொருளறிய இயலாத—மரபு உணர்த்த மாட்டாத—நிலை பெற்றது; ஆதலின், தொல்காப்பியம், பத்துப் பாட்டு, எட்டுத் தொகை, சிலப்பதிகாரம், திருக்குறள் போன்ற கி. பி. இரண்டாம் நூற்றாண்டிற்கு மிக முந்திய நூல்களின் ஆழ்கருத்து அறிந்து கொள்ள இயலாது. இடர்ப்பாடு உற்றது உண்மையேயாகும்! அவற்றை, கி. பி. 13, 14 ஆம் நூற்றாண் டிலே தோன்றிய இளம்பூரணர், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடர், அடியார்க்கு நல்லார், பரிமேலழகர் முதலிய உரையாசிரியர்கள் போக்கி வைத்துள்ளனர். இவர்களில், 'நச்சினார்க்கு இனியர்' (விரும்பிய வர்களுக்கு இனிமை வாய்ந்தவர்) என்ற உரையாசிரியர், கி. பி. 14ஆம் நூற்றாண்டிலே, மதுரையிலே, விளக்கமுற்றிருந்தார் என்பர். இவர், தொல்காப்பியம், பத்துப்பாட்டு, கலித்தொகை, சீவக சிந்தாமணி, குறுந்தொகை ஆகிய நூல்களுக்கு உரை வரைந்துள்ளார். இவர், நேரே எளிமையாக உரை எழுதாது, கொண்டு கூட்டி அலைத்துப் பொருள் கண்டுள்ளார்; அவ் வுரைகளில், பல நிகழ்ச்சிகளையும் கதைகளையும் புகுத்தியுள்ளார். பல நூல்களின் பாக்களை மேற்கோள் காட்டியுள்ளார். இவரது உரையினைப் புகழ்ந்து அறிஞர் போப்பையர் (கி. பி. 1820—1908) அவர்கள் "ஐரோப்பியரின் உரை விளக்கம் போன்று அமைந்துள்ளது; மூலப் பகுதியை விளக்கி, இலக்கணச் சிறப்பை எடுத்துக் காட்டுகின்றது" என்று பாராட்டியுள்ளார். உரையாசிரியர் நச்சினார்க்கினியர், தொல் காப்பியம் - பொருளதிகாரம் - களவியல் - 'நாற்றமும் தோற்ற மும்' என்று தொடங்கும் நூற்பாவின்,

> "மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
> பல்வேறு கவர்பொருள் நாட்டத் தானும்..."

என்ற பகுதிக்கு மேற்கோளாகக் காட்டியுள்ள ஒரு பாடல், இன்ன நூலினைச் சார்ந்தது என்று குறிப்பிடப் பெறவில்லை! அப் பாடல், இதுவரை கிடைக்கப்பெறாத ஏதேனும் ஒரு நூலின் பாடலாக இருக்கலாம்! அது, பழைமை வாய்ந்த சங்க நூல் பாடல்களின் சாயலைப் பெற்றுள்ளது; ஆதலின், அப் பாடல், சங்க இலக்கிய நூற்களின் காலத்தைச் சார்ந்ததாகவே இருக்க வேண்டும் என்று ஒருதலையாக நம்பலாம். அதிலே, 'திருச்செந் தூர்', 'தீம்புனல் அலைவாய்' என்று தெளிவாகவே குறிப்பிடப்

பெற்றுள்ளது.[4] எனவே, அப் பாடலை ஆராய்ந்து பார்ப்பதிலே, ஓர் ஆர்வம் பிறந்துள்ளது.

பண்டை நாள்களில், இலக்கியம் படைத்த புலவர் பெருமக்கள் இரண்டு முறைகளைக் கையாண்டுள்ளனர். ஒன்று 'உள்ளது' கூறும் 'உலகியல் வழக்கம்'; மற்றொன்று, புனைந்துரை வகையால் 'இல்லது' கூறும் 'நாடக வழக்கம்.' உலகியல் வழக்கிலே வானவியல், கணக்கியல், வரலாற்று இயல், நில இயல் பிற அறிவியல் முதலிய புறப்பொருள் கருத்துக்களைத் தாம் படைத்த பாக்களின் ஊடே பதிய வைத்தனர். நாடக வழக்கிலே, கற்பனை மிகுந்த அகப்பொருட் கருத்துக்களைப் பாக்களாக-பனுவல்களாக-நூல்களாகப் படைத்து மொழிந்தனர். இங்கே, ஆக்கக் கற்பனைக்கும் அழகுணர் கற்பனைக்கும் மிகுதியாகவே வழங்கினர்!

"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலன்நெறி வழக்கம்"[5]

எனவே, பழங்காலத் தமிழறிஞர் படைத்துள்ள அகப்பொருள் பாக்களிலே, புலன்நெறி (அறிவு முறை) வழக்கமாக, புனைந்துரை-கற்பனைகளே மிகுந்துள்ளன எனலாம். நச்சினார்க்கினியர் உரை மேற்கோள் பாடல் ஒன்று இந்த அறிவு நெறி முறையிலே, ஆக்கக் கற்பனை அமைய படைக்கப் பெற்றுள்ளது; பார்க்கலாம்.

**உள்ளுறை உவமம் - இறைச்சிப் பொருள் :**

பழந்தமிழ்ப் புலவர் படைத்துள்ள பாக்களிலே, 'அணி' (Figure of speach) என்னும் அழகு அமைந்திருத்தலைக் காணலாம்; அணிகளுக்கெல்லாம் ஆணி வேராகத் திகழ்வது 'உவமை'யே ஆகும். ஆதலின், 'அணியியல்' என்ற பகுதியைத் தொல்காப்பியம், 'உவமவியல்' என்ற பெயரிலேயே உணர்த்துகின்றது. உவமையையும் பொருளையும் ஒன்றாக்கிக் கூறினால், 'உருவகம்' என்னும் வேறோர் அணியாக விளங்குகின்றது.

---

4 தொல்காப்பியம். இராவ்பகதூர் ச. பவானந்தம் பிள்ளை பதிப்பு (சென்னை 1916); பொருளதிகாரம் - நச்சினார்க்கினியம்; களவியல்; பக்கம் - 497.

5, தொல்காப்பியர் - தொல்காப்பியம் மூலம் (கி. மு. 600) நூற்பா-999, கழக வெளியீடு - ௯௪௪; பொருளதிகாரம் - அகத்திணை இயல் - நூற்பா - ௫௩.

இதனால், 'உவமை' (Simile), 'உருவகம்' (Metaphor) ஆகிய இரு அணிகளையுமே செய்யுள் சிறப்புறுதற்கு உதவுவன என்பர்.[6] ஆயினும், உவமையணியே எளிமை வாய்ந்தது; இனிமை வாய்ந்தது என்பர். அகத்துறைப் பாடல்களில் வரும் உவமைகள், நேரடியாகச் சென்று கருத்தை விளக்கும் பணிகளோடு நிற்பதில்லை! உவமைக்கு உரிய பொருளைத் தந்து, மேலும், அவை முழுவதும் சேர்ந்து, உள்ளே வேறொரு பொருளை உய்த்துணர்ந்து கொள்ளுமாறு, புள் விலங்கு முதலிய கருப் பொருள்களால் விளக்கம் பெறும்! அதனையே, 'உள்ளுறை உவமம்' என்பர். இது தமிழ் மொழியில் மட்டுமே உளது என்பர்! இவ்வளவோடு நிற்காமல், மேலும் ஒரு நுண்பொருள், சில உள்ளுறை உவமங்களில், அவாவி நிற்கும்! அவ்வாறு, கருப் பொருள்களின் வழியே அவாவி நிற்கும் உட்பொருளினை, 'இறைச்சிப் பொருள்' என்று இலக்கண ஆசிரியர்கள் விளக்கம் தருவர். (இறைச்சி=ஐவகை நிலங்களுக்கும் உரிய தனித்தனி கருப்பொருள்.) இவ்வாறு, உய்த்து உணரும் வகையிலே, குறிப்பில் புலப்படுத்தும் முறை அறிவு இன்பம் பயக்கும் என்பர்!

"உள்ளுறை உவமம் உய்த்துணர் வகைத்தாய்ப்
புள்ளொடும் விலங்கொடும் பிறவொடும் புலப்படும்"[7]

"உள்ளுறுத்(து) இதனொ(டு) ஒத்துப்பொருள் முடிகென
உள்ளுறுத்(து) உரைப்பதே, உள்ளுறை உவமம்"[8]

"இறைச்சி தானே பொருள்புறத் ததுவே"[9]

"இறைச்சியில் பிறக்கும் பொருளுமார் உளவே
திறத்தியல் மருங்கின் தெரியு மோர்க்கே"[10]

---

6. பேராசிரியர் அ. ச. ஞானசம்பந்தன், எம். ஏ. (1916)· இலக்கியக்கலை (முதற்பதிப்பு - 1953) கழக வெளியீடு - ௪௧௧; உவமையின் கதை: பக்கம் - 169.

7. நாற்கவிராச நம்பி (கி. பி. 12ஆம் நூற்றாண்டினர்) - அகப்பொருள் விளக்கம்; கழக வெளியீடு - ௧௧௮ ஒழிபியல் (நூற்பா - ௨௧௮) [புள் (பறவை), விலங்கு முதலிய கருப்பொருள்கள் பதினான்கு என்பர்]

8. தொல்காப்பியம் மூலம்; கழக வெளியீடு - ௧௪௪. நூற்பா - 994; (பொருள் - அகத்திணையியல்: ௪௮) [உள்ளுறுத்து=புலவன் ஒரு கருத்தை உள்ளத்தே கருதிக்கொண்டு; கருப்பொருள்களின் உள்ளே வைத்து.]

9, 10. ௸ ௸ நூற்பா - 1175, 6. (பொருள் - பொருளியல்: ௯. ௧௨)

[இறைச்சி=கருப்பொருளின் இயைபு; பொருள் புறத்தது=கூற வேண்டிய கருத்துக்கு வேறாக உள்ளன; அடைமொழி வடிவிலே வந்து

எடுத்துக்காட்டு :

பழங்காலச் சிற்றூர் வாழ்விலே, தாய், தந்தை, செவிலி, உடன்பிறந்தோர், தலைவி, தோழி நிரம்பிய ஒரு குடும்பத்திலே, தோன்றிய நிகழ்ச்சியொன்று, படப்பிடிப்புப்போன்று, ஒரு பழம் பாடலிலே அமைந்துள்ளது! அந்தச் செல்வக்குடியிலே, நற்றாய்க்கு உதவியாக, செவிலியே மக்களை வளர்த்து வருவாள். அவள் மகளே, பெரும்பாலும் தலைவிக்குத் தோழியாக அமைவாள். அந் நாளில், தலைவி தோழி ஆகிய திருமணம் ஆகாத பருவப் பெண்களை, விளை பயிர்களைக் காத்து வருமாறு, வயல் காடு கழனிகளுக்குப் பெற்றோர் அனுப்பும் வழக்கம் இருந்தது. பெண்மையைக் காத்துக் கொள்ளும் மனவுறுதியை, இயற்கை, பெண்களின் உடலமைப்பிலேயே வழங்கியுள்ளது! அச்சம், நாணம், அறிவு முதலியன பெண்களின் இயல்புகளாக நின்று நிலவுகின்றன; அடக்கமும், மனநிறைவும், அமைதியும், நேர்மையும், தகுவன மொழிதலும், அறிவும், அருமைப்பாடும் 'உயரிய பெண்களின் இயல்புகளாக' அமைந்துள்ளன.

"அச்சமும் நாணும் மடனும் முந்துறுந்த
நிச்சமும் பெண்பாற்(கு) உரிய என்ப"[11]

"செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்
அறிவும் அருமையும் பெண்பால் ஆன"[12]

ஆயினும், தலைவி, தூய அறவாழ்விலே - கற்பு நெறியிலே - வாழ்வதற்கு, தோழியே அரணாக அமைவாள்! அறத்தொடு நிற்றலுக்கு, இம் மரபே காரணம் ஆகின்றது!

(தொடரும்)

---

பயன்படுவது ஆதும். பொருளும் (ஆர்) உள=வேறு உட்கருத்தும் உள்ளன; ஆர்=அசை]

11. தொல்காப்பியம் மூலம்; கழக வெளியீடு - ௧௯௪௪; நூற்பா-1045. (பொருள் - களவியல்; அ)

12. தொல்காப்பியம் மூலம்; கழக வெளியீடு - ௧௯௪௪; நூற்பா-1155 (பொருள் - பொருளியல்; ௫௩)

# பழந்தமிழில் மக்கட்பெயர்

[பன்மொழிப் புலவர், இரா. மதிவாணன்]

(சிலம்பு ௨௨, பரல் ௭, ௯௫அஆம் பக்கத் தொடர்ச்சி)

13. அதங்கோட்டாசான்

அதங்கோட்டாசான் தொல்காப்பியம் அரங்கேற்றப்பட்ட போது அவைக்குத் தலைமை தாங்கிய பெருமைக்குரியவர். இன்றைய திருவாங்கூர் அக் காலத்தில் அதங்கோடு எனப் பட்டது. அதங்கோடு—திருவிதாங்கோடு—திருவாங்கூர் எனத் திரிந்ததாகக் கூறுவர். அதவம் என்பது அத்திமரம். அத்தி மரம் மிகுந்த பகுதி அதங்கோடாயிற்று எனவும் அதியன்கோடு அதங்கோடாயிற்று எனவும் ஆதன்கோடு அதங்கோடாயிற்று எனவும் பலவாறு கூறுகின்றனர். தாலமி நிலநூலில் குறிப் பிடப்படும் அதரிமா கொரியூர் (adarima koreour) அதங்கோ டூரைக் குறிப்பதாகலாம் எனக் கருதப்படுகிறது.

ஆசான் என்பது ஆசிரியன், பற்றுக்கோடானவன், மூத்தோன் எனப் பொருள்படும். ஆசு—பற்றுக்கோடு. ஆசா கெந்தை (புறம்-235). ஆசான் தமிழ்ச் சொல். வடமொழியில் ஆசு என்னுஞ் சொல் விரைவுப் பொருள் தரும். ஆசுகவி யென்னுஞ் சொல்லை நோக்குக. ஆசார்ய என்பதை ஆ+சர்+ண்யத் (—நடப்பவன், ஒழுகுபவன்) எனப் பிரிப்பர். வடமொழியில் 'ஆ' வெறும் முன்னொட்டாகவும் அண்மைப் பொருள் முன்னொட்டாகவும் வரும். எனவே, ஆசார்ய என்ப தும் ஆசானுக்கு மூலமாகாது.

14. அதியன்

அதியன், அதியர் என்பன சேரமன்னரின் குடிப்பெயர். அதக்கு என்னும் வினைச் சொல்லுக்குக் கீழ்ப்படுத்து, அடக்கு என்று பொருள். மாவலியைக் குறும்பதக்கி (திவ். பெரியா. 4, 7, 9), அதகன்—வலிமை புள்ளவன் (திவ். பெரியா. 2, 1, 9), அதி—மிகுதிப் பொருள் தரும் இடைச்சொல் (குறள் 636 உரை), அதிகன்—மேம்பட்டவன், அதிகாரி. அதியரையன்—மீன்வலை ஞர் தலைவன்.

மலையாளத்தில் அதிகன் என்னுஞ் சொல்லுக்கு எல்லாரி னும் மேம்பட்டவன் என்று பொருள். கன்னடத்தில் அத்திக (adhdhika) என்னுஞ் சொல் தலைவனையும் முதல்வனையும் குறிக் கும். துளுமொழியில் அதிக என்னுஞ் சொல் சொத்தாளுங் குடிகளைக் குறிக்கும். தெலுங்கில் அதிகடு என்பது மேம்

பட்டவனைக் குறிக்கும். இராவணன் மகனுக்கும் அதிகாயன் என்று பெயரிடப்பட்டிருந்தது. யாவரினும் மேம்பட்டவன் என்னும் பொருளில் அதியன், அதிகன் என்பன குடிப்பெயராக வழங்கிப் பிற்காலத்தில் இயற் பெயராகவும் வழங்கலாயின.

கடையெழு வள்ளல்களுள் ஒருவனான அதியமான் நெடுமான் அஞ்சி இச் சேரக்குடியில் தோன்றியவன். அதிகன், அதியன் என்பதன் இடைப்போலி. வாணியன்—வாணிகன் எனத் திரிதலை நோக்குக. அதிகமான் தகடூர் பொருது வீழ்ந்த எழினி புறம். 230 ஆம் பாடலில் குறிப்பிடப்படுகிறான்.

அதியர் என்பதற்கு அடக்கியாளும் மேலாண்மையாளர் என்னுந் தெளிவான பொரு ளிருக்கும்போது அதங்கோடு என்னும் ஊரின் தொடர்பாக இக் குடிப் பெயர் தோன்றியதாகக் கூறுவது பொருந்துமாறில்லை.[1] ஊர்ப் பெயர்கள் குடிப் பெயராக வருதற்குரிய சான்றுகள் கிடைப்பின் இக் கருத்து ஒருகால் ஏற்கப்படலாம்.

15. அதியமான் நெடுமான் அஞ்சி

அதியமான் அதியர்களுக்குத் தலைவனாக இருந்தவன்.

"ஆர்கலி நறவின் அதியர் கோமான்
போரடு திருவிற் பொலந்தா ரஞ்சி" (புறம். 91)

அதியமான், மலையமான், தொண்டைமான் ஆகிய பெயர் களில் 'மான்' ஈறு உள்ளது. பர். அ. மொ. துரையரங்கசாமி அவர்கள் அதியர்+மகன். அதியமான் (அதியர் வழியில் வந்த வன்) என மருவியதாகக் கூறுகிறார். இவர் கூற்றின்படி அதியர் வழிமரபினர் (அரசரல்லாதவரும்) அனைவரும் அதியமான் களாவதால் அரசனான அதியமானை இப் பெயர் சுட்டுமாறில்லை. மகன் என்னுஞ் சொல்லுக்குத் தலைவன் எனவும் பொருளிருத்த லால் அதியர்+மகன்—அதியர்க்குத் தலைவன் எனக் கூறியிருப் பினும் ஒருவாறு பொருளியைந்திருக்கும். அதுவும் பொருந் தாமையை நெடுமான் என்னுஞ் சொல் விளக்கி நிற்கிறது. நெடுமானை நெடு+மகன்—நெடுமான் ஆனதாக இயைக்கக் கூடாமை காண்க.

மான் என்னுஞ் சொல்லுக்குப் பெரியோன் என்று பொரு ளுண்டு. கோ—கோன் என னகர மெய்யீறு பெற்றவாறு மா—மான் ஆயிற்று.

மான்—பெரியோன் பெருமகன்.

1. சங்க காலச் சிறப்புப் பெயர்கள். (பக். 245) பர். அ. மொ. துரையரங்கசாமி.

மானே தொழுகை வலி (சி. பேர். 12, பு. வெண்பா).

நெடுங்காலம் தெலுங்கராட்சியின் கீழும் தமிழராட்சியின் கீழும் இருந்த கலிங்க நாடான ஒரிசாவில் பேசப்படும் ஒரியா மொழியில் மான் என்னுஞ் சொல் பன்மையீறாகவும் பலர்பாலீறாகவும் வழங்கி வருகிறது.

| ஒருமை | பன்மையீறு, பலர்பாலீறு |
| --- | --- |
| பிளா (பிள்ளை) | பிளாமான், பிளாமானெ (பிள்ளைகள், குழந்தைகள்) |
| நர (மாந்தன்) | நரமான் (மாந்தர், மக்கள்) |
| பாலிகா (சிறுமி) | பாலிகாமான் (சிறுமியர்) |

தமிழில் மார் பலர்பாலீறாகவுள்ளது. தம்பிமார், தோழிமார் என்பவற்றை நோக்குக. மார் பெருக்கப் பொருள் தருவதால் அகன்ற மார்புக்குப் பெயராக வுள்ளது.

தமிழின் தாக்கம் இருக்குவேதம் முதல் இன்றைய வட இந்திய மொழிகள் வரை ஊடுருவி யிருப்பதால் மான் என்னுஞ் சொல் முதலிற் பெருமைப் பொருளிலும் அதற்கடுத்து உயர்வுப் பன்மை யீறாகவும் அதற்கடுத்து வெறும் பன்மையீறாகவும் வளர்ச்சிபெற்ற படிநிலைகளை ஒரியாமொழி நமக்குக் காட்டி நிற்கிறது. இதன்படி அதியமான் என்னும் குடிப்பெயரிறுதியிலுள்ள மான் முதலிற் பெருமகன் எனப் பொருள்பட்டுப் பின்னர் உயர்வுப் பன்மை குறித்தது என்றும் நெடுமான் என்பதனிறுதியிலுள்ள மான் பெருமை குறித்த இயற்பெயரீறு என்றும் கொள்வது ஏற்புடைத்தாகும்.

துளுநாட்டில் மானப்ப, மோனப்ப எனப் பெயர்கொண்ட ஆடவர் பலருள்ளனர். பெருமகன், பெரியோன் எனப் பொருள்படும். தமிழ் 'மான்' வடமொழியில் மான்ய எனவும் மகான் எனவும் திரிந்துள்ளது. பிதாமஹ (தந்தைக்குப் பெரியோன்—பாட்டன்), மாதாமஹ (தாய்க்குப் பெரியோன்—பாட்டி) என்னும் வடசொல்லீறுகளுக்கும் வேர்ச்சொல் தமிழாதல் காண்க. பிதாமஹ என்பதை அதியமான் (அதியர்க்குப் பெரியோன்) என்பதுடன் ஒப்பிடுக. அதியமான் என்பது குடிப்பெயர். மலையமான் சேரமான் என்பவற்றைச் சேனாவரையர் குடிப்பெயராகக் கொண்டார்.[1] நெடுஞ்செழியன் நெடுமிடல் என்றாற் போன்று நெடுமான் இயற்பெயராதல் வேண்டும். கிள்ளிவளவன், கரிகாற் சோழன் என இயற்பெயரை யடுத்துச் சிறப்புப் பெயர் அல்லது குடிப்பெயர் வரும் மரபுப்படி அஞ்சி

1. தொல். சொல். 165. சேனா, உரை.

யென்னும் சிறப்புப் பெயர் இயற்பெயருடன் சேர்ந்து நெடுமானஞ்சி என நின்றது.

அதியமான் மலையமானேடும் பெருஞ்சேரலிரும்பொறையோடும் பொருத நிகழ்ச்சிகளை நாம் அறிவோம். அதியமான் வழியினர் பிற்காலத்தில் கன்னட மன்னரோடு போரிட்டதைக் கன்னடக் கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. அதியமானை அடக்குபவன் என்றும் அதியமானுக்கு யமன் என்றும் பட்டந் தாங்கிய கன்னட மன்னர் இருந்தனர். அதியமான் தனக்கு எதிரா ஏன்றெழுந்த பிட்டிதேவனைப் பற்றியும் அறிகிறோம். அதியமானை 'அதியமரச' என்றும் 'மளவரொள் கண்ட' (மழவருள் பேராண்மையாளன்) என்றும் அக் கல்வெட்டுக்கள்[2] குறிப்பிடுகின்றன.

அதியன் உதியன் ஆதன் பொறையன் என்பன சேரரின் குடிப்பெயர்கள். நிலப்பெயர், வினைப்பெயர், பண்புப்பெயர் ஆகியவற்றி னடிப்படையாக இக் குடிப்பெயர்கள் தோன்றியிருத்தலை[3] அவ்வச் சொல் விளக்கத்தில் காணலாம்.

16. அதியன் விண்ணத்தனர்

அதியன் விண்ணத்தனர் அகம் 301 ஆம் பாடலைப் பாடியவர். அப்பன், ஐயன் என்னும் முறைப் பெயர்கள் மதிப்புறவு குறித்த அடை மொழிகளாகிக் கண்ணப்பன் கண்ணையன் என வழங்குவது போன்று பழங்காலத்தில் கண்ணன்+அத்தன்—கண்ணத்தன், விண்ணன்+அத்தன்—விண்ணத்தன் என வழங்கியிருத்தல்வேண்டும். அதியன் குடிப்பெயர். விண்ணத்தன் இயற்பெயர். ஆர் உயர்வுப் பன்மையீறு. அதியன் எழினி, அதியமான் பொகுட்டெழினி, அதியமான் நெடுமான் என அனைத்துப் பெயர்களிலும் அதியமான் என்னும் குடிப்பெயர் முன் வருதலைக் காண்க. விண்ணத்தன் திருமால் பெயராகவும் இருத்தல் கூடும்.

17. அந்தியிளங்கீரனர்

அந்தியிளங்கீரனர் அகம் 71 ஆம் பாடலைப் பாடியவர். அந்திப் பொழுதைச் சிறப்பித்துப் பாடியதால் அந்தியிளங்கீரனர் எனப் பெயர் பெற்றதாகக் கூறுவர். அந்தி, அந்தமரய்யா என்பவை கன்னட நாட்டில் ஆண்பாற் பெயர்களாக

---

2 Epigraphica Carnatica vol. 9.

3. பிராமணரைச் சர்மா என்றும், அரசரை வர்மா என்றும், வணிகரை குப்தா என்றும், சூத்திரரை தாசர் என்றும் பிறப்பி னடிப்படையில் இயற் பெயருடன் சாதிப் பெயரிட்டழைக்கும் ஆரியர் வழக்கம் போலன்றித் தமிழரின் குடிப்பெயர்கள் பண்பும் திறனும் இயல்பும் குறித்தனவாயிருத்தல் குறிப்பிடத் தக்கது.

வழங்கின. அந்தி அக்கய்யனும் பிடி பொன்னையனும் அல்லமனும் (Epi c. vol. ii) என்பது கன்னடக் கல்வெட்டுத் தொடர். கோவை மாவட்டத்தில் அந்தியூர் என ஓர் ஊரும் உள்ளது. அந்தி ஆண்பாற் பெயராகவும் இடப் பெயராகவும் ஆட்சி பெற்றிருத்தலால் இது மேலும் ஆய்தற்குரியது.

கீரன் என்னுஞ் சொல் பழையன் என்று பொருள்படும். கீரன் என்னுந் தலைப்பில் இதன் விளக்கத்தைக் காணலாம்.

18. அந்துவன்

'அந்துவன்' சேரரின் இயற்பெயர்களுள் ஒன்று. செல்வக் கடுங்கோ வாழியாதனின் தந்தையின் பெயர் அந்துவன் என்பது :

"மடியா வுள்ளமொடு மாற்றோர்ப் பிணித்த
நெடுநுண் கேள்வி அந்துவற் கொருதந்தை
ஈன்றமகள் பொறையன் பெருந்தேவி யீன்ற மகன்"

என்னும் பதிற்றுப்பத்து வரிகளால் தெரிகிறது. இன்றும் துளு நாட்டில் அந்தப்ப, அந்தய்ய என்று பெயரிட்டுக் கொள்கின்றனர்.

பழந்தமிழில் 'அந்தை' ஒரு நிறைப் பெயராகவும் 'அந்தியம்' ஒரு பேரெண்ணைக் (1000 billion) குறிப்பதாகவும் இருந்தது. அந்து என்னுஞ் சொல்லுக்குச் சந்தித்தல், முடித்தல், கட்டுதல், கிட்டுதல் என்னும் பொருள்கள் உள்ளன.

த. அந்தித்தல்—சந்தித்தல்.

அந்துகம்—கழல் (மூட்டு ஒன்றுகப் பொருத்தப்பட்டது).

க. அந்து—அடை, சேர், நெருங்கு.

தெ. அந்து—சேர், பொருத்து.

ம. அந்து—அருகில்.

'ஞான் நினக்கு அந்திகே வந்நு.'
அந்திக—உயர்ந்த மாடம்.
அந்தம்—அழகு.

கன்னட நாட்டில் அந்தாதி என்பது ஒரு குடிப்பெயர். அந்தாதியரின் நொழம்ப செட்டி மகன் திருகுந்த செட்டியைக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. அந்துவஞ்சேரியின் மரபு அந்தாதி மரபாகியிருக்கலாம். சேரரின் இயற்பெயரான இச் சொல்லுக்கு மலையாள மொழியிலுள்ள மேலோன், மூத்தோன், அழகன் என்னும் பொருள்களே ஏற்புடையனவாக வுள்ளன. மலையாள நாடகங்களில் அந்தி என்னுஞ் சொல் மூத்த தமக்கையைக் குறிக்கிறது.

இதிலிருந்து அந்துவன்—அண்ணே என்னும் மதிப்புறவுச் சொல்லாகப் பயன்படுத்தப்பட்ட வழக்குண்மை வெளிப்

படுகிறது. மேலோன், மூத்தோன், சிறந்தோன் என்னும் பொருளில் பொதுவாகவும் அண்ணல் என்னும் பொருளில் சிறப்பாகவும் வழங்கிய இச் சொல் சேர நாட்டு மக்களிடை இயற் பெயராக வழங்கியது எனலாம். அந்துவஞ் செள்ளை என மகளிரும் அழைக்கப்பட்டனர். மையூர் கிழான் வேண்மாள் அந்துவஞ் செள்ளை என்பவள் இளஞ் சேரலிரும் பொறையின் தாயும் குட்டுவன் இரும் பொறையின் மனைவியுமாவாள். நல்லந்துவன், அந்துவஞ் சாத்தன் (புறம். 71), அந்துவன் கீரன் (புறம். 359) ஆகியோரின் பெயர்கள் இப் பெயர் கொண் டோர் அக் காலத்துப் பலராக இருந்ததைக் காட்டும்.

19. அம்மள்ளனார்

அம்மள்ளனார் நற்றிணையில் 82 ஆம் பாடலைப் பாடியவர். 'மள்ளர் பலரினும் வேறுபடுத்தும் பொருட்டு அம் மள்ளனார் எனப்பட்டார் போலும்' என்று நற்றிணை உரையாசிரியர் குறிப் பிடுகிறார். நல் (நல்லந்துவன்), அம் (அம்மெய்யன்) என்பன இயற்பெயருக்கு அடை மொழிகளாக வருவது இயல்பாகும்.

மள்ளன் என்றால் திண்ணியன், வீரன் என்று பொருள். துளுமொழியில் மள் என்னும் வினைச்சொல் திறம்படச் செய்தலைக் குறிக்கும். அம்மள்ளன் அழகிய திறலுடையன் என்று பொருள் படுகிறது. தன் மகன் செயல் திறமுடையனாக விளங்குதலை விரும்பி அக் காலத்துப் பெற்றோர் அம்மள்ளன் எனப் பெயரிட்டனராதல் வேண்டும்.

20. அம்மூவனார்

ஐங்குறு நூற்றில் இரண்டாம் நூறு இயற்றியவர் அம் மூவனார். மூவன், மூவாதியார் என்றும் புலவர்களின் பெயர்கள் காணப்படுகின்றன. மூவன் என்பது மூப்பன் எனத் தலைமை குறித்த பட்டப்பெயர். பட்டப்பெயர் குடிப்பெயர் ஆகிய வற்றுக்கு 'அம்' என்னும் அடைமொழி பெரும்பாலும் சேர்க்கப் படுவதில்லை. எனவே அம்மூவனாரின் பெயர் 'அம்மு' என்னும் வினையடியாகத் தோன்றியதாகல் வேண்டும். அமு முதலுக்குப் பரவுதல் நிறைதல் என்று தமிழிலும், விற்றல் என்று தெலுங் கிலும், விரும்புதல் என்று கன்னடத்திலும் பொருள் உள்ளது. "தந்தெ தாய்கள மாதுகளன் ஆன் எந்துவும் திக்கரிசல் அம்மெனு" (Bp. 24-15) என்பது பழங் கன்னடத் தொடர். இதற்கு, 'நான் தாய் தந்தையரின் பேச்சை என்றும் மறுத் துரைக்க விரும்பேன்' என்று பொருள். கன்னட நாட்டில் அம்மி செட்டி என்பவன் கல்வெட்டில் குறிக்கப்படுகிறான். திம்மு செட்டியைத் திம்மி செட்டி என அழைக்கும் உலக வழக்கை இதனுடன் ஒப்பிடுக.

(தொடரும்)

# வரலாற்று அடிப்படையில் வடமொழி அகர முதலி

ஒரு மொழியின் வளத்தை உணர்த்துவன அகர முதலிகள். ஒரு சொல்லுக்கு உள்ள பொருளனைத்தையும் தொகுத்துத் தருவது அகர முதலியின் பணி. வரலாற்று அடிப்படையில் ஒரு சொல் எவ்வெப் பொருளை எவ்வெக் காலத்தில் பெற்றது என்பதனை இலக்கியம், கல்வெட்டு போன்றவற்றிலிருந்து தொகுக்கப் பெற்ற மேற்கோள்களுடன் தொகுத்து விளக்குவது வரலாற்று அகர முதலி (Historical Dictionary).

உலகில் பழைமையான மொழிகள் அனைத்தும் இவ்வாறு வரலாற்று அகர முதலிகளைத் தொகுத்து வெளியிடுகின்றன. அதைப் பற்றிய சிந்தனையே யில்லாதிருப்பது தமிழ்மொழி ஒன்றுதான்.

அண்மையில் வரலாற்று அடிப்படையில் வடமொழி (சமஸ்கிருத) அகர முதலி வெளியிடத் தொடங்கியுள்ளது. அதன் முதல் மடலம் 1976 இல் வெளிவந்தது. இரண்டாவது மடலம் 1978 இல் வந்துள்ளது. முதல் மடலம் (அ. அகசிநாசநு) 216 பக்கங்களையுடையது.

காட்டாக 'அம்ச' என்ற சொல்லுக்கு 8 வகையான பொருளைக் கொடுத்து அந்த எட்டு வகையான பொருள்களிலும் இலக்கியங்களில் எங்கெங்கு வழங்கப் பெற்றுள்ளன என்பதை மேற்கோள்களாக எடுத்துக்காட்டியுள்ளது இவ்வகர முதலி. சில வரலாற்று அகர முதலிகளில் ஒரு சொல்லின் வேர்ச்சொல் ஆராய்ச்சியும் தரப் பெறும்.

இவ்வகர முதலிக்கு முன்னோடியாக 1948 இல் தொடங்கப்பெற்ற அகர முதலிப்பணி துணை நிற்கிறது. அது முதல் 1973 வரை 1000 நூல்களைப் பார்வையிட்டு எண்பது இலட்சத்திற்கு மேற்பட்ட சொற்கள் தொகுக்கப் பெற்றன. ஆனால், நூலெதுவும் வெளிவரவில்லை. பூனாவிலுள்ள (Deccan College) தக்கணக் கல்லூரியின் மொழியியல் துறை அதன் இயக்குநரான டாக்டர் கத்ரேயின் தலைமையில் இப் பணியைச் செய்தது.

1973 இல் இத் திட்டம் செம்மைப்படுத்தப் பெற்று வரலாற்று முறை அகர முதலியை வெளியிடத் துணிந்தது. டாக்டர். ஏ. எம். கட்கேயைத் தலைமைப் பதிப்பாசிரியராகக் கொண்ட பதிப்புக் குழுவில் 21 அறிஞர்கள் முழுநேரப் பணியாற்றுகின்றனர்.

இவ்வகர முதலியை வெளியிட இந்திய அரசின் கல்வித்துறை, பல்கலைக் கழக மானியக்குழு, மகாராட்டிர அரசு, யுனெஸ்கோ முதலியவை பொருளுதவி செய்து வருகின்றன. பூனா தக்கணக் கல்லூரி வடமொழித் துறையினரும் பூனாப் பல்கலைக் கழகத்தின் மொழியியல் துறையினரும், இணைந்து தற்போது உருவாக்கிவரும் இந்த வடமொழி வரலாற்று அகர முதலியை (An Encyclopaedic Dictionary of Sanskrit on Historical Principles) பூனா தக்கணக் கல்லூரிப் பட்டமேற்படிப்பு ஆய்வு மன்றம் வெளியிட்டுள்ளது. முதல் இரு மடலங்களும் ரூ 250/= விலைக்குக் கிடைக்கின்றன. அகர முதலி 30 அல்லது 40 மடலங்களில் நிறைவு பெறலாம்.

# செய்திகளும் குறிப்புக்களும்

## 'பாரதிதாசன் கதைப் பாடல்கள்' ஆய்வுநூல் வெளியீட்டு விழா

டாக்டர் இளங்கோ அவர்களால் எழுதப்பட்டு தமிழ்மணி புத்தகப் பண்ணையாரால் வெளியிடப்பட்ட பாரதிதாசன் கதைப் பாடல்கள் ஆய்வுநூல் வெளியீட்டு விழா, சென்னை 'பாம்குரோவ்' ஓட்டலில் 26—4—78 இல் நடைபெற்றது க. இராசாராம், பி. ஏ. விழாவிற்குத் தலைமை தாங்கினர். நாவலர் நெடுஞ்செழியன் நூலை வெளியிட்டார். அமைச்சர்கள் அரங்கநாயகம், காளிமுத்து, இராசா முகமது மற்றும் பல கட்சித் தலைவர்களும், அறிஞர் பெருமக்களும் வாழ்த்துரை வழங்கினர். டாக்டர் இளங்கோ நன்றியுரை வழங்கினர். ஆய்வுநூல் பதிப்புப் பணி ஆற்றிய த. கோவேந்தன் அவர்கட்கு மிதிவண்டி அன்பளிப்பும் தேநீர் விருந்தும் வழங்கப்பட்டன.

## "அண்ணா கோவை" நூல் வெளியீட்டு விழா

கற்புக்கரசிப் பதிப்பகத்தின் சார்பில் 29—4—78 இல் சென்னை சர் தியாகராயர் கல்லூரி அரங்கில், கவிஞர் இரா பணியன் எழுதிய 'அண்ணா கோவை' என்னும் நூலும், திரு. அரங்க இராமலிங்கன் எழுதிய 'பாரதிதாசன் படைப்புகளில் நகைச்சுவை' என்னும் நூலும் வெளியிடப்பட்டன. வெளியீட்டு விழாவிற்குப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர் டாக்டர் சி பாலசுப்பிரமணியம் தலைமை தாங்கினர். திரு. ச. சாம்பசிவம் வரவேற்புரை நிகழ்த்தினர். பேராசிரியர் க. அன்பழகன் எம்.ஏ, நூல்களை வெளியிட்டார். டாக்டர் ம. செல்வராசன், திரு. க. த. திருநாவுக்கரசு ஆகியோர் பாராட்டுரை வழங்கினர்.

## இந்தி திணிக்கப்பட மாட்டாது; விரும்பினல் படிக்கலாம்!

"தமிழ் மொழி, அழியாத உறுதி வாய்ந்த கருங்கற் பாறையைப் போன்று பழைமையானதொரு மொழியாகும் தமிழ் மொழியின் வளர்ச்சியையோ, அதன் இலக்கியங்களையோ வேறு எந்த மொழியாலும் அழித்திட இயலாது"—என்று அண்மையில் திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்த தென்னூரில் சிற்றூர் மன்றத் தலைவர்களிடையே பேசிய தமிழக ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி அவர்கள் குறிப்பிட்டார். அவர் பேசிய இடம் இந்தி பிரசார நிலையமொன்றைச் சார்ந்த இடம். மேலும் அவர் பேசுகையில்,

"வடநாட்டில் வேலை தேடும் நோக்கத்தோடு தமிழ் நாட்டில் தாமே விரும்பிச் சிறுவர் சிறுமியர் இந்தியைப் படிக்கலாம். அதனுல் தமிழுக்கு ஊறு எதுவும் நேரிடாது" என்றும் பேசியுள்ளார்!

## தமிழ்நாடு நீதிமன்றங்களில் தீர்ப்புக்கள் அனைத்தும் தமிழில் அமையவேண்டும்

7-5 1978 இல் திருச்சி மறைமலையடிகளார் கலை மன்றத்தில் கூடிய 44 ஆவது புலவர் குழுவினர் கூட்டத்தில் முடிவு செய்யப் பெற்றது.

## கவிஞர் கண்ணதாசன் அரசவைக் கவிஞரானார்

தமிழ்நாடு அரசு கவியரசர் கண்ணதாசன் அவர்களை அரசவைக் கவிஞராக அமர்த்தியுள்ளது. அவருக்குத் திங்கள் ஊதியமாக ஆயிரம் வெண்பொற் காசுகள் வழங்கப்படுமென்றும் அத்துடன் ஊர்தி வசதி போன்ற பிற தகுதிகளும் அளிக்கப்படும் எனவும் அரசினரால் அறிவிக்கப்பட்டுள்ளது. மேலும் இவ் அரசவைக் கவிஞர் பதவி கவிஞரின் ஆயுட்காலம் முழுமைக்கும் நீடிக்கும் எனவும் கூறப்படுகிறது.

## இரட்டை மாநகரில் திருக்குறள் அவதானம்

செகந்திராபாத்தில் கீஸ் உயர்நிலைப் பள்ளியில் நடைபெற்ற 17 ஆவது ஸ்ரீராமநவமி கலைவிழாவில் திருக்குறள் செல்வன் இரா. ஈசுவரனின் திருக்குறள் அவதான நிகழ்ச்சி ஏப்ரல் 17, 18ஆம் நாட்களில் மிகச்சிறப்பாக நடந்தது. முதல் நாள் திருக்குறள், நாலடியார், சிவஞானபோதம் அடங்கிய நிகழ்ச்சிக்கு உஸ்மானியா பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் திரு. சிங்காரவடிவேலன் அவர்கள் தலைமை தாங்கினர். இரண்டாம்நாள் திருக்குறள், அபிராமி அந்தாதி, கந்தர் அநுபூதி நிகழ்ச்சி, திரு. பித்துக்குளி முருகதாஸ் அவர்கள் முன்னிலையில் நிகழ்ந்தது. பல்லாயிரக்கணக்கான பொதுமக்கள் குழுமியிருந்து பல அன்பளிப்புக்களை அளித்துத் திருக்குறட் செல்வனை வாழ்த்தினர்கள். ஹைதராபாத் L.I.C தமிழ்ச் சங்கத்திலும் ஈசுவரனின் அவதான நிகழ்ச்சி நடைபெற்றது.

## தமிழ் 'கா. சு' நினைவு 14 ஆவது ஆண்டு இலக்கிய விழா

பேராசிரியர் கா. சு. பிள்ளை அவர்களின் 91 ஆவது பிறந்தநாள் விழாவும், குழித்தலை 'கா. சு.' நினைவு இலக்கியக் குழுவின் 14 ஆவது ஆண்டு விழாவும் மே 13, 14 ஆம் நாள்களில் குழித்தலை அறிஞர் அண்ணா திருமண அரங்கில் நடைபெறும். இரண்டாம்நாள் கருத்தரங்கிற்கு முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் தலைமை ஏற்பார். இரண்டு நாட்களிலும் பட்டிமன்றம் கருத்தரங்கு முதலியன நடைபெறும்.

## திருச்சியில் பாவேந்தர் விழா

இவ்விழா தமிழ்நாடு அரசு செய்தி மக்கள் தொடர்புத்துறை சார்பில் 29—4—78 இல் திருச்சி தேவர் மன்றத்தில் நடைபெற்றது. முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்கள் தலைமையில் சிறப்புக் கூட்டமும், பேராசிரியர் மீ. இராசேந்திரன் (கவிஞர் மீரா) அவர்கள் தலைமையில் கவியரங்கமும் நடைபெற்றன.

## 'அவ்வை' சண்முகம் 66 ஆவது பிறந்தநாள் விழா

26—4—78 இல் சங்கரதாஸ் சுவாமிகள் நினைவு மன்றத்தின் சார்பில் சென்னை மத்திய நூலகச் சொற்பொழிவு மண்டபத்தில்

அவ்வை சண்முகம் அவர்களின் 66 ஆவது பிறந்தநாள் விழாவும் "நாடகச் சிந்தனைகள்" நூல் வெளியீட்டு விழாவும் நடைபெற்றன. மாண்புமிகு அமைச்சர் இராம. வீரப்பன் விழாவிற்குத் தலைமை தாங்கினர் மாண்புமிகு அமைச்சர் அரங்கநாயகம் அவ்வை சண்முகம் அவர்களின் "நாடகச் சிந்தனைகள்" என்னும் நூலினை வெளியிட்டார். சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் கவிஞர் எஸ். கந்தசாமி, கலைமாமணி டி. வி. நாராயணசாமி ஆகியோர் சிறப்புரை ஆற்றினர்.

### மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(முன் பரல்-அ, சகசு ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் (ஏப். 78) | 100 | 00 |
| உயர்திரு. ஆ சுப்பையா பிள்ளை அவர்கள் ( ,, ) | 5 | 00 |
| திரு. R. நமச்சிவாயம் அவர்கள், ஸ்டேட் பாங்க் சென்னை | 101 | 00 |
| திரு. இராமச்சந்திரன் அவர்கள், குடந்தை. | 5 | 00 |

இந் நூல்நிலையத்தில் நூற்றுக்கு மேற்பட்ட பேராசிரியர்கள் எம். லிட்., டி. லிட். பட்டங்கள் பெறப் பதிவு செய்துகொண்டு பல துறையிலும் ஆராய்ச்சி செய்து வருகின்றனர்கள். கழகப் புத்தக விற்பனை குறைவினல் நூல்நிலையத்தை நடத்த 1976 முதல் நன் கொடை பெறத் திட்டமிட்டுள்ளோம். ஆனால் எதிர்பார்த்தபடி பயன் கிடைக்கப்பெறவில்லை என்பதைத் தமிழறிஞர்கட்கும் அன்பர் கட்கும் தெரிவித்துக்கொள்ளுகின்றோம்.

---

### பவழக்காரத் தெரு கழக வீடு எண்மாற்றம்

மாநகராட்சி வீட்டு எண் 6ஐ 91ஆக 11—5—78இல் மாற்றியுள்ளது. இனி அவ்வாறே எழுதுக.

வ. சு.

---

## மதிப்புரை

### தமிழ் இலக்கியக் கொள்கை-3

பதிப்பாசிரியர், டாக்டர் ச. வே. சுப்பிரமணியம், அ. சு. மணவாளன், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-20. ரூ. 8—00.

இத் தொகுதியில் பத்து ஆய்வுக் கட்டுரைகள் இடம் பெற் றுள்ளன. பழந்தமிழ் இலக்கணமான தொல்காப்பியம் முதல் இன்றைய புதிய இலக்கியவடிவான புதுக் கவிதை வரை ஈராயிர மாண்டு இலக்கண, இலக்கியங்களின இலக்கியக் கொள்கைகளை இத் தொகுதி தொகுத்துக்கொடுக்க முயன்று அதில் வெற்றியும் பெற் றுள்ளது. இலக்கியத் திறனய்வுத்துறை பல்கலைக்கழக அளவில் சிறந்து விளங்கும். இந் நாளில் அத்துடன் தொடர்புடைய ஆசிரியர் கட்கும் மாணவர்கட்கும் பயன்படும் வகையில் இத் தொகுதி அமைந் துள்ளது.

## இமயம் எங்கள் காலடியில்

[ஆசிரியர் : கோ. மோகனரங்கன். வசந்தா பதிப்பகம், 21, தருமராசா கோயில் தெரு, சென்னை-16 விலை : ரூ. 6-50.]

ஆலந்தூர் மோகனரங்கன் அவர்கள் பாரதியார், பாரதிதாசன் வழியில் வைத்தெண்ணப்படுதற்குரிய ஒரு சிறந்த கவிஞர். 'இமயம் எங்கள் காலடியில்' என்னும் இக் கவிதைத் தொகுப்பு இவர் அவ்வப் போது வானொலியிலும், கவியரங்குகளிலும் இசைத்த, கற்பனை வளஞ்செறிந்த—சுவையும் பயனும் கூடிய கவிதைகளின் தொகுப் பாகும். இவர்தம் கவிதையாற்றலை விளக்கப் புகுந்தால் அஃதொரு திறனாய்வுக்கு ஒப்பாகும்.

## தமிழ்க் காவலன்

[ஆசிரியர் : ஓவியப் பாவலர் மு. வலவன்; வெளியீடு : சுபதி பதிப்பகம், 96/2, இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை-600004; விலை : ரூ. 2-50.]

நந்திக் கலம்பகத்தின் பாட்டுடைத் தலைவனை தெள்ளாறெறிந்த நந்திவர்மப் பல்லவனைப் பற்றிய வரலாறு தழுவிய கற்பனை நாடக மாகிய இந் நூல் படிக்கவும் நடிக்கவும் தக்க வகையில் வரையப் பட்டுள்ளது. நடை எளிமையாகவும் சுவையாகவும் உள்ளது.

## வாழ்க்கையும்—வழிபாடும்

[ஆசிரியர் : சேலம் சேக்கிழார் கொ. அ. அப்பாய் செட்டியார், வெளியீடு : பவளவிழாக் குழுவினர், அருள்மிகு இராமலிங்க சௌடேசுவரியம்மன் திருக்கோயில், சேலம். விலை : ரூ. 1-50.]

வாழ்க்கையும் வழிபாடும், இறையுண்மை, அம்பலக் கூத்தன், மெய்கண்ட தேவ நாயனார், உமாபதி சிவம், மெய்கண்ட நூல்கள் என்னும் தலைப்புக்களில் வரையப்பட்ட அறுபெருங் கட்டுரைகளைக் கொண்டுள்ள இந் நூல் ஆசிரியரின் பவளவிழா நினைவாக வெளி யிடப்பட்டுள்ளது. சிவநெறியாளர்களுக்கும், சமய விளக்கம் பெற விழைவார்க்கும் இந் நூல் பெரிதும் பயன்படும்.

## இமயபாரதி கவிதைகள்

[ஆசிரியர் : இமயபாரதி; வெளியீடு : பைரவி பதிப்பகம், 52, புனித சேவியர் தெரு, சென்னை 600001; விலை : ரூ. 4-00.]

ஆசிரியர் பற்பல இதழ்களிலும் மலர்களிலும் அவ்வப்போது தாம் எழுதி வெளியிட்ட பல்வேறு பாடல்களைப் பத்திப் பூக்கள், அமுதப் பூக்கள், சந்தனப் பூக்கள், மகரந்தப் பூக்கள், கதம்பப் பூக்கள் எனும் தலைப்புக்களில் பாகுபடுத்தி அமைத்து நூல்வடிவில் வெளி யிட்டுள்ளார்கள். பலப்பல பாடல்களைப் படிக்க வேண்டும் என்னும் வேட்கையுடையவர்கட்கு இந்நூல் பயன்படும்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை, 2/140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ. சுப்பையா.

# பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

| | |
|---|---|
| இலக்கணத் தொகை - யாப்பு பாட்டியல் —டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் | 34 00 |
| தமிழ்த் தாமரை—ஔவை சு. துரைசாமி | 5 00 |
| ஈழத்தில் தமிழ் இலக்கியம்—கா. சிவத்தம்பி | 6 00 |
| மதமும் பண்பாடும்—வி. எஸ். வி. இராகவன் | 10 00 |
| வசந்த பைரவி—வே. கபிலன் | 15 00 |
| ஒரு கிளையில் இரு கிளிகள்—சி. ஆர். ராஜம்மா | 5 00 |
| பாச உள்ளம் ,, | 10 00 |
| செந்தூரம் ,, | 7 00 |
| இதோ ஒரு சீதாப் பிராட்டி—பூவை. எஸ். ஆறுமுகம் | 9 00 |
| பூம்புகார் முதல் இமயம் வரை —பேராசிரியர் கண. சிற்சபேசன் | 8 00 |
| புனிதக் கரை—மா. ர. தமிழ்ச் செல்வன் | 7 50 |
| இமயம் எங்கள் காலடியில் (கவிதைத் தொகுப்பு) —ஆலந்தூர் கோ. மோகனரங்கன் | 6 50 |
| மைதீட்டிய விழிகள்—மு. வை. அரவிந்தன் | 2 25 |
| வெள்ளை மலர்கள் ,, | 1 75 |
| இமய பாரதி கவிதைகள்—இமயபாரதி | 4 00 |
| வலவன் தமிழ்க் காவலன் (நாடகம்) —மு. வலவன் | 2 50 |
| எண்ணங்கள் ஆயிரம்—கவிஞர் கண்ணதாசன் | 1 50 |
| வாழ நினைத்தால்—லட்சுமி | 5 00 |
| தை பிறக்கட்டும் ,, | 4 00 |
| புதுக் கணக்கு (கவிதைகள்) —கொ. செ. பலராமன் | 2 50 |
| காந்தியும் லெனினும்—பி. ஸ்ரீ | 2 50 |
| சின்ன சின்ன பாட்டு—ஒம்பியூர் உத்தமன் | 2 10 |
| ஆர். சூடாமணியின் சிறுகதைகள் —தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு சங்கம் | 5 00 |
| ஒரு சொர்க்கம் காத்திருக்கிறது—வல்லம் வேங்கடசாமி | 5 40 |
| பௌத்தம்—சோ. ந. கந்தசாமி | 2 00 |
| கிறித்தவக் கலைஞர்களும் தமிழ்ப் பண்பாடும் —தயாநந்தன் பிரான்சிஸ் | 8 00 |
| பூமியைச் சுற்றும் ஆரியப்பட்டா—கு. ராஜாராம் | 2 00 |
| மாணவர்க்கு அறிவுரை—கே. எஸ். லட்சுமணன் | 3 00 |

அப்பர் அச்சகம், சென்னை-1.